# இளந்துறவி

(மூன்று நாடகங்கள்)

பெ. தூரன்

விற்பனை உரிமை:

பாரி நிலையம்

59, பிராட்வே · சென்னை 1.

## சமர்ப்பணம்

மருத்துவரும் நண்பருமான

### திரு. ஆர். ராமச்சந்திரன் அவர்களுக்கு.

என் உடலுக்கும் உள்ளத்திற்கும் சிறந்த மருத்துவ ராக அவரைப்போல் வேறு யாரே அமைவர்?

## தோற்றம்

வாசுதேவன்

மாலதி

ராகவன்

சோமசுந்தரம்

சரோஜினி

போலீஸ் இன்ஸ்பெக்டர்

வேலைக்காரன்

# குற்றவாளி

## காட்சி ஒன்று

[சென்னைப் பட்டினத்திலே ஒரு நாகரிகமான மாளிகை. அதிலே கலைச்சுவை தோன்ற அணி செய்யப்பட்ட விசாலமான அறை. மாலதி தன் கணவன் வாசுதேவனுடைய வருகையை எதிர்பார்த்து நிற்கிருள். மாலை நேரம். மாலதிக்கு இருபத்தைந்து வயதிருக்கலாம். ஆனல் அவள் பார்ப்பதற்கு இருபது வயதைக் கடக்காதவள் போலவே தோன்றுகிருள். வெளியே கார் வந்து நிற்கும் அரவம் கேட்கிறது. மாலதி ஆவலோடு முன்னல் அடியெடுத்து வைக்கிருள். வாசுதேவன் உள்ளே நுழைகிருன். அவனுக்கு முப்பத்திரண்டு வயதாகிறது. மேல்நாட்டு முறையில் உடையணிந்திருக்கிருன். உள்ளே நுழைந்து கொண்டே அவன் பேசுகிருன்.]

வாசு மாலதி, நீ தயாராக இரு. சோமு இங்கே ஆறு மணிக்குச் சரியாக வருவான்.

மாலதி : சரி, உங்கள் நண்பர் வருகிருரா ? அப்போ நாம் வெளியிலே புறப்பட்டமாதிரிதான்.

வாசு : ஏன் அப்படிச் சொல்லுகிருய் ?

மாலதி : அவர் வந்ததும் நீங்கள் இரண்டு பேரும் சதுரங்கம் ஆட உட்கார்ந்து விடுவீர்கள். பிறகு உங்களுக்கு நேரம் போகிறதே தெரியாது.

வாசு : அவன் இன்றைக்குச் சதுரங்கம் ஆட வரவில்லை. சினிமாவுக்கு நம்மோடு போகத்தான் வருகிறுன்.

மாலதி : நீங்கள் ஏன் இன்றைக்கு இவ்வளவு நேரம் ?

வாசு : நான் லேட்டாக வந்தாலும் ஆபீசிலிருந்து இரண்டு மணி நேரத்துக்கு முன்னமேயே போன் மூலம் உனக்கு நோட்டீஸ் கொடுத்துவிட்டேனே ? உனக்குச் சிங்காரம் பண்ணிக்கொள்ள இரண்டு மணி நேரம் போதாதா ?

மாலதி : எனக்குச் சிங்காரமே தேவையில்லை. நீங்கள் தான் இப்படியெல்லாம் சிங்காரம் செய்துகொள்ளச் சொல்லுகிறீர்கள். இதைப் போடு...அந்தச் சேலையைக் கட்டு என்று......

வாசு : மாலதி, இந்த விவாதத்தை இப்போ ஆரம்பித்து விடாதே—பிறகு சினிமாவுக்குப் போகவே முடியாது.

மாலதி : நான் இப்பொழுதே தயார். நீங்கள் டீ சாப்பிட்டதும் உடனே புறப்படலாம். உங்கள் நண்பருக்கும் டீ ரெடியாக இருக்கிறது.

வாசு : மாலதி, அந்தக் காஞ்சீபுரம் நீலப் பட்டுப் புடவையை கட்டிக்கொண்டு வா.

மாலதி (சிரித்துக்கொண்டே): பார்த்தீர்களா ? இப்போ யாரால் லேட் ஆகப் போகிறது ?

வாசு : லேட் ஒண்ணுமில்லை—இன்னும் நேரமிருக்கிறது. அதைக் கட்டிக்கொள்.

மாலதி (மேலும் சிரித்துக்கொண்டு) : இன்னும் சொல்ல வேண்டியதை யெல்லாம் ஒரே அடியாகச் சொல்லி விடுங்கள். பிறகு நான் வேட் செய்வதாக உங்கள் நண்பரிடம் புகார் செய்யக் கூடாது.

வாசு : நீ எப்படி வந்தாலும் எனக்கு அழகாகத்தான் தோன்றும். ஆனல், நான் வாங்கி வருகிறதெல்லாம் வீணைகப் பெட்டியில் கிடப்பதா ?

மாலதி : எதற்கு இப்படிப் பணத்தைச் சேலையிலும், நகைகளிலும் வாரி இறைக்கிறீர்கள் ? நான் என்ன வாவது கேட்கிறேனு என்ன ?

வாசு (அன்போடு) : நீ எதற்குக் கேட்க வேணும் ? எனக்குத் தெரியாதா ? நான் சம்பாதிக்கிற தெல்லாம் எதற்கு ?

மாலதி : நீங்கள் ஒன்றுமே வாங்கிக் கொடுக்காது போனலும் உங்களுடைய அன்பை நான் அறியாமற் போகமாட்டேன். சேலையிலும், நகையிலுமா அன்பிருக்கிறது ?

வாசு : அதற்காக இல்லை மாலதி—ஏதாவது ஒரு அழகான பொருளைக் கண்டால் அதை உனக்கு வாங்கிக் கொடுக்க வேண்டும் என்று எனக்கு உடனே ஆசை உண்டாகிறது. பிறகு அதை வாங்காமல் என்னல் இருக்க முடிவதில்லை.

மாலதி (சிரித்துக்கொண்டே): குழந்தைகள்தான் இப்படி ஆசைப்படும்.

வாசு : குழந்தையா ? ஆமாம், நான் குழந்தைதான், நீயும் நானும் குழந்தைகளைப் போலக் களங்க மில்லாமல் ஒருவர்மேல் ஒருவர் அன்போடு சதா இருக்க வேணும். அதுதான் என் ஆசை,

மாலதி : எனக்கு மாத்திரம் வேறென்ன ஆசை ? உங்களுக்கு மனைவியாக ஏற்பட்டதே என்னுடைய பெரிய பாக்கியம்—ஆமாம், அந்தப் பத்தாயிரம் ரூபாயைப் பாங்கியில் போடாமல் எதற்காக அப்படியே வைத்திருக்கிறீர்கள் ?

வேலைக்காரன் (உள்ளே நுழைந்துகொண்டே) : ஸார்...

வாசு : அந்த வைரத் தோடு, வைர அட்டிகை எல்லாம் நாளைக்கே வாங்கி விடலாம்.

மாலதி : அதெல்லாம் ஒன்றுமே வேண்டாம்—இருக்கிறதே போதும். பணத்தைப் பாங்கியிலே போட்டு விடுங்கள்.

வேலை : ஸார்.........

வாசு : என்ன முனியா ? என்ன விஷயம் ?

வேலை : யாரோ உங்களைப் பார்க்க வந்திருக்காரு—உடனே பார்க்கணுமாம்.

வாசு : யாரது ? இப்பொழுது யாரையும் நான் எதிர் பார்க்கவில்லையே !

மாலதி : வைரத்திலே சும்மா காசைப் போடாதீர்கள். பாங்கியில போட்டாலும் வட்டி வரும்.

[இந்த வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே ராகவன் உள்ளே நுழைகிறான். எடுப்பான தோற்றமும், கூர்ந்த பார்வையும் உடையவன் அவன்.]

ராகவன் : தாங்கள்தானே வாசுதேவன் ?

வாசு : ஆமாம்—நீங்கள் யார் ?

ராகவன் : உங்களிடம் தனியாக ஒரு முக்கியமான விஷயம் பேசவேணும்.

வாசு : சும்மா சொல்லுங்கள்—என் மனைவி இருப்பதால் பரவாயில்லை.

ராகவன் : இல்லை—இது தனிப்படப் பேசவேண்டிய விஷயம்.

வாசு : சரி, மாலதி—நீ போய் உடையை மாற்றிக் கொண்டு புறப்படத் தயாராக வா. நான் அதற்குள் இவரோடு......

மாலதி : இதோ ஐந்து நிமிஷத்திலே நான் வந்து விடுகிறேன்.

[மாலதி உள்ளே போகிறாள்]

வாசு : என்ன விஷயம் சொல்லுங்கள் – நீங்கள் யார் ? இந்த நாற்காலியில் உட்காருங்கள்.

ராகவன் (உட்காராமல்) : சரோஜினி உங்களுக்குத் தெரியுமல்லவா ?—அவள் இறந்து போனாள்.

வாசு (திடுக்கிட்டு) : சரோஜினியா ? நீங்கள் சொல்லுவதை நம்ப முடியவில்லையே ?

ராகவன் : நம்ப முடியாத செய்திதான்—கொஞ்ச நேரத்திற்கு முன்புதான் அவள் இறந்தாள்—யாரோ கொலை செய்திருக்கிறார்கள்.

வாசு (மேலும் திடுக்கிட்டு) : கொலையா ? கொஞ்ச நேரத்திற்கு முன்னாலா ?

ராகவன் (நிதானமாக) : ஆமாம், கொலைதான்—கைத் துப்பாக்கியால் யாரோ சுட்டுக் கொன்றிருக்கிறார்கள்.

வாசு : சுட்டா கொன்றிருக்கிறார்கள்? அவளுக்கு அப்படி யார் விரோதிகள் ?

ராகவன் (மேலும் நிதானமாக) : நீங்கள் நான் அதற்குக் காரணம். அது எனக்குத் தெரியுமென்று உங்களிடம் சொல்லிக்கொள்ளவே நான் வந்தேன்.

வாசு (ஆத்திரத்தோடு) : இது சுத்தப் பொய்—நீ யார் ?

ராகவன் : ஆத்திரப்படாதீர்கள்—நீங்கள் சுட்டுக் கொன்றதை நிரூபிக்க என்னால் முடியும்.

வாசு : நான் சுடவும் இல்லை. உன்னால் அதை நிரூபிக்கவும் முடியாது. எனக்கும் அவளுக்கும் எந்த விதமான சம்பந்தமும் கிடையாது.

ராகவன் : நீங்கள் இன்று மாலை நான்கு மணிக்கு ஆபீஸ் முடிந்ததும் சரோஜினி வீட்டிற்குப் போயிருக்கிறீர்கள்.

வாசு (ஆத்திரமாக): நீ அதை எப்படி நிரூபிக்க முடியும்? நான் அதை மறுக்கிறேன்.

ராகவன் : இன்று நான்கு மணிக்கு ஆபீஸ் முடிந்ததும் அங்கு வருவதாக நீங்கள் சரோஜினிக்கு எழுதிய கடிதம் என்னிடம் இருக்கிறது.

வாசு : நான் அங்கு போயிருந்தாலும் நானே அவளைச் சுட்டுக் கொன்றதாகக் கூறுவது பொய். கொலை என்கிற எண்ணமே என் உள்ளத்தில் எந்தக் காலத்திலும் தோன்றாது.

ராகவன் : உங்களுடைய கைத் துப்பாக்கி அங்கே இருந்தது.

வாசு (திடுக்கிட்டு) : அது உனக்கு எப்படித் தெரியும் ?

ராகவன் : நானே என் கண்ணால் பார்த்தேன்.

வாசு : சரோஜினி வீட்டிலிருந்து இங்கே வருகிற அவசரத்திலே தோல் கைப்பெட்டியை அங்கேயே

வைத்துவிட்டு வந்துவிட்டேன். இப்பொழுதுதான் அது நினைவுக்கு வருகிறது. அதிலே என் கைத் துப்பாக்கி இருந்தது.

ராகவன் : நீங்கள் கொலை செய்ததை நிரூபிக்க அது நல்ல சாட்சியாக இருக்கிறது. அந்தத் துப்பாக்கியாலேயே அவள் இறந்திருக்கிறாள்.

வாசு (பதற்றத்தோடு) : நான் அவள் வீட்டிற்கு வந்ததை யாரும் நிரூபிக்க முடியாது. நான் எழுதிய கடிதமிருந்தாலும் நான் வந்ததை நிரூபிக்க அது மட்டும் போதாது. கடிதம் எழுதிவிட்டு வராமலும் இருக்கலாமல்லவா ?

ராகவன் : உங்கள் கடிதம் மட்டும் போதாதென்றால் நீங்கள் வந்ததை வேலைக்காரி பார்த்திருக்கிறாள். அவளும் மற்றொரு சாட்சி. உங்கள் தோற்பையும் நல்ல சாட்சியாக இருக்கிறது.

வாசு (கோபமாக) : நான் அங்கு வந்திருந்தாலும் நானே கொலை செய்ததாக எப்படிக் கூற முடியும் ? நான் அங்கிருந்து புறப்பட்ட பிறகு அங்கு வேறு யாராவது வந்து அங்கே என் பையிலிருந்த என்னுடைய துப்பாக்கியை எடுத்து அவளைச் சுட்டிருக்கக் கூடாதா ? அப்படித்தான் நடந்திருக்க வேண்டும்.

ராகவன் (நிதானமாகவும் அழுத்தமாகவும்) : இப்படி யெல்லாம் சொல்லி நீங்கள் தப்ப முடியாது. நீங்கள் அங்கு வந்து போன பிறகு அரைமணி நேரங்கூட ஆகவில்லை. அந்த நேரத்தில் அங்கே யாரும் வரவில்லை என்பதற்கு வேலைக்காரியே சாட்சி. நானும் அதை ஊர்ச்சிதம் செய்ய முடியும். நீங்கள்

உள்ளே நுழைந்ததையும் அவசரமாக வெளியே வந்ததையும் நானும் பார்த்தேன்.

வாசு (கோபத்தோடு): இப்படியெல்லாம் பேசி என் மேலே ஒரு அபாண்டமான கொலைக் குற்றத்தை எதற்காகச் சாட்டுகிறாய் ?

ராகவன்: நான் குற்றம் சாட்டவில்லை. நடந்ததைத் தான் சொல்லுகிறேன். உங்கள் குற்றத்தை நிரூபிக்க என்னிடத்திலே சந்தேகிக்க முடியாத அத்தாட்சிகள் இருக்கின்றன. அவற்றைப் பற்றி உங்களுக்குத். தெளிவுபடுத்தவே நான் வந்தேன்.

வாசு (ஆத்திரத்தோடு): நீ யார்? உனக்கு இதிலே என்ன சம்பந்தம்?

ராகவன் (நிதானமாக): என் மனைவியைக் கொலை செய்தவரைப் பிடித்துத் தருவதற்கு எனக்குச் சம்பந்தமில்லையா ?

வாசு: யார்...... நீயா ராகவன் ?

ராகவன்: ஆமாம்—நான் ராகவன்தான். மூன்று வருஷங் களுக்குப் பிறகு இன்றுதான் என் மனைவியைத் தேடி வீட்டை நோக்கி வந்தேன். வந்தவன் அவளுடைய பிணத்தைத்தான் கண்டேன்.

வாசு (சற்று அமைதியுடன்): உங்களோடு சமாதானம் செய்து கொள்ளவே சரோஜினி என் உதவியை நாடினாள்.

ராகவன்: அதைப்பற்றியெல்லாம் கேட்டுக்கொண்டிருக்க எனக்கு இப்பொழுது நேரமில்லை. உங்களுக்குள் என்ன சம்பந்தம் என்று ஆராய்ச்சி செய்ய நான் வரவில்லை. காரியம் மிஞ்சிப் போய்விட்டது. என்

ஆலோசனையைக் கேட்டால் நீங்கள் தப்பலாம். இல்லாவிட்டால் நான் நேராகப் போலீசுக்குப் போகிறேன்.

வாசு (சமாதானப் படுத்தும் பாவனையில்) : ராகவன், இந்தக் கொலைக்கும் எனக்கும் யாதொரு சம்பந்தமு மில்லை.

ராகவன் (கண்டிப்பாக) : மறுபடியும் இந்தப் பேச்சு வேண்டாம். எனக்கு நேரமாகிறது. நான் சொல்லு கிறபடி நடக்கச் சம்மதமா?

வாசு : இப்பொழுது என்ன செய்யச் சொல்லுகிறீர்?

ராகவன் : நீங்கள் சுட்டுக் கொன்றதற்கு இரண்டு முக்கிய மான அத்தாட்சிகள் இருக்கின்றன. உங்கள் கடிதம் ஒன்று, மற்ருென்று உங்கள் கைத் துப்பாக்கி. அவை இரண்டையும் உங்களுக்குக் கொடுத்துவிடுகிறேன். என்னுடைய விருப்பத்தைப் பூர்த்திசெய்யவேண்டும்.

வாசு : என்ன உங்கள் விருப்பம் ?

ராகவன் : எனக்கு இருபதாயிரம் ரூபாய் ரொக்கமாகக் கொடுக்கவேண்டும்.

வாசு : இது அநியாயம். நான் செய்யாத ஒரு குற்றத்தை என்மேல் சுமத்துவதோடல்லாமல் அதற்காக இவ்வளவு பெரிய தொகை கேட்பதும் சரியல்ல.

ராகவன் : நான் விஷயத்தை விளக்கிவிட்டேன். நீங்கள் தப்பித்துக்கொள்ள வேண்டுமானுல் என் ஆலோ சனைப்படி நடக்கவேண்டும்.

வாசு : இல்லாவிட்டால்... ?

ராகவன் : போலீசில் பிராது கொடுப்பேன். பிறகு நீங்கள் தப்பமுடியாது. பணம் கொடுத்தால் நான்

இன்றே மறுபடியும் வெளியூர் சென்றுவிடுவேன். கடிதமும் துப்பாக்கியும் உங்கள் கைக்கு வந்துவிடும்.

வாசு: என்னைப் பயமுறுத்திப் பணம் பிடுங்க முயற்சி செய்கிறீர்கள். நான் இதற்குச் சம்மதிக்கமாட்டேன் என்ன வந்தாலும் சரி.

ராகவன்: சரி, அது உங்களிஷ்டம். தப்பிக்க வழி சொன்னேன். அதை ஏற்றுக் கொள்ள இஷ்டமில்லாவிட்டால் வருகிறதை அனுபவித்துக் கொள்ளுங்கள். நான் புறப்படுகிறேன், வணக்கம்.

[ராகவன் வெளியேபோக அடியெடுத்து வைக்கிறான். மாலதி அவசரமாக வருகிறாள்.]

மாலதி: ராகவன், கொஞ்சம் நில்லுங்கள். நீங்கள் சொன்னதையெல்லாம் நான் கேட்டுக்கொண்டுதானிருந்தேன். கொஞ்சம் நில்லுங்கள்.

வாசு: அவரை எதற்கு நிற்கச் சொல்லுகிறாய்?

மாலதி: அவர் கேட்கிறபடி பணத்தைக் கொடுத்து விடுங்கள். ராகவன், பத்தாயிரத்துக்கு நீங்கள் சம்மதிக்க வேணும். அந்தத் தொகையை உடனே கொடுக்க முடியும்.

வாசு (கோபத்தோடு): அது முடியாது. இந்த அநியாயத்திற்கு நான் உடன்பட மாட்டேன்.

மாலதி (கவலையோடு): அநியாயமோ என்னவோ, இப்பொழுது தப்பிக்க வழி பாருங்கள்.

ராகவன்: வாசுதேவன், உங்கள் மனைவி சொல்லுவதை நிதானமாகச் சிந்தித்துப் பாருங்கள்—நான் இன்னும் சற்று நேரத்தில் இங்கே வருகிறேன். அப்பொழுது

முடிவு சொன்னால் போதும். ஆத்திரப்பட்டு உங்கள் வாழ்க்கையையே கெடுத்துக்கொள்ள வேண்டாம். நான் போய் வருகிறேன்.

[ராகவன் வெளியே போகிறான். வாசுதேவனும் மாலதியும் சற்று நேரம் மௌனமாக நிற்கிறார்கள்.]

வாசு : அவன் போகட்டும். வெளிக்கதவைத் தாளிடு மாலதி.

மாலதி (தாமதித்து, விசனமாக) : இப்பொழுது என்ன செய்வது? அவன் சொல்லுகிறபடி பணத்தைக் கொடுத்துவிடுங்கள். அதுதான் நல்லது.

வாசு : என்ன, நீயும் என்மீது சந்தேகப்படுகிறாயா ?

மாலதி (விசனத்தோடு) : எனக்கென்ன சந்தேகம்? இப்படி சவகாசம் வைத்துக்கொண்டால் வராத தீமையெல்லாம் வந்துதான் சேரும்.

வாசு : மாலதி, நான் சரோஜினியோடு எந்தவிதமான சவகாசமும் கொண்டிருக்கவில்லை.

மாலதி: பின்னே எதற்கு அவள் வீட்டிற்குப் போனீர்கள்?

வாசு : அவள் என்னவோ உதவி வேண்டுமென்று பல தடவை ஆபீசுக்கு வந்தாள். ஆபீசிலே இந்த விஷயமெல்லாம் பேச முடியாதென்று சொன்னேன். பிறகு அவள் மிகவும் மன்றாடிக் கேட்டதால் வீட்டுக்கு வர ஒப்புக் கொண்டேன்; அவ்வளவுதான்.

மாலதி: அவள் உங்களிடத்திலே உதவிக்கு வருவானேன்?

வாசு : காலேஜில் நாங்கள் ஒன்றாகப் படித்தோம். அதை வைத்துக்கொண்டு என்னிடம் வந்திருக்கிறாள்.

மாலதி : அப்படி முன்னமேயே பழக்கமா? பிறகு அவளையே நீங்கள் கல்யாணம் செய்துகொண்டிருக்கலாமே?

வாசு (கோபமாக) : மாலதி, உனக்கு என்மேலே நம்பிக்கையில்லையா? இதென்ன பேச்சு?

மாலதி (தேம்பிக்கொண்டே) : என்னுடைய நம்பிக்கையைப்பற்றி இப்பொழுதென்ன? நீங்கள் தப்பித்துகொள்ள வழி தேடுங்கள்.

வாசு : நீ சந்தேகப்பட்டால் எனக்குத் தப்பிக்க வேண்டுமென்ற ஆசையே கிடையாது. நான் ஒரு குற்றமும் செய்யவில்லை. இருந்தாலும் நீ இப்படி நினைத்தால் நான் எந்தக் குற்றத்தையும் ஏற்றுக்கொள்ளத் தயார்.

மாலதி : இப்படி நீங்கள் பேசக்கூடாது — குற்றம் செய்யாவிட்டாலும் நீங்கள் சுட்டுக் கொன்றதாக நிரூபிக்க வேண்டிய சாட்சியங்கள் இருக்கின்றன. அதனால் அவன் கேட்கிறதுபோலப் பணம் கொடுத்து விடுங்கள்.

வாசு : என்னிடம் இப்பொழுது கையிலே இருபதினாயிரம் இல்லை. இருந்தாலும் கொடுக்கமாட்டேன்.

மாலதி (கவலையோடு): ஐயோ, உங்கள்மேல் பெரிய பழி வந்து சேரும். கையிலே இருக்கிற பத்தாயிரத்தைக் கொடுத்தால் அவன் திருப்தியடைந்துவிடுவான்.

வாசு : பழி வந்தால் வரட்டும். இனிமேல் இந்த வாழ்க்கையைப்பற்றி எனக்குக் கவலையில்லை.

மாலதி : நீங்கள் இப்படிப் பேசலாமா? உங்களுடைய ஆசையெல்லாம் ஒரு க்ஷணத்திலே இப்படி மறைந்து போகுமா?

வாசு : நீ என்னைப்பற்றிச் சந்தேகமாக நினைக்கிறபோது இந்த வாழ்க்கையே எனக்கு வேண்டாம்.

மாலதி : என்னுடைய சந்தேகம் ஒரு பொருட்டல்ல. நீங்கள் இந்த ஆபத்திலிருந்து தப்பவேண்டும்.

வாசு : தப்பி என்ன பிரயோசனம்? உன்னுடைய சந்தேகத்தால் நமது வாழ்க்கை இனிமேல் இன்பமாக இராது.

மாலதி (தேம்பிக்கொண்டு): நீங்களே எனக்குத் தெய்வம். நீங்கள் என்ன தப்புச் செய்தாலும் நான் அதைப்பற்றி நினைக்க மாட்டேன். என்னுடைய மனதை யறியாமல் எதற்கு இப்படிப் பேசுகிறீர்கள்?

வாசு : உன்னைத் தவிர வேறு பெண்ணை நான் கனவில் கூட நினைத்ததில்லை. ஆயிரம் வகைகளிலே எனது அன்பை உனக்குக் காட்டியிருக்கிறேன்.

மாலதி : நான் இவற்றையெல்லாம் மறுக்கிறேனு என்ன? இப்பொழுது நீங்கள் இந்தத் தொல்லையிலிருந்து விடுபடவேண்டும். அதுதான் எனக்குக் கவலை.

[வெளிக்கதவிலிருந்து மணியடிக்கும் ஓசை கேட்கிறது.]

வாசு : யாரோ வெளியிலிருந்து கூப்பிடுகிருர்கள். முனியன் எங்கே போனுன்?

மாலதி : நாம் சினிமாவுக்குப் போவதாக இருந்ததால் அவனைப் போகச் சொல்லிவிட்டேன். நாளைக் காலையில்தான் வருவான்.

வாசு : ஒருவேளை சோமுவாக இருக்கும்—கதவைத் திறந்து பார்.

மாலதி : அவர் ஆறுமணிக்குத்தானே வருவார்? எதற்கும் நான் போய்ப் பார்த்து வருகிறேன்.

[மாலதி வெளியே போகிருள். வாசுதேவன் கவலையோடு அறையில் உலாவுகிருன். சற்று நேரத்தில் மாலதியும் சரோஜினியும் வருகிருர்கள். சரோஜினி இளவயதுள்ள நாகரிக மங்கை.]

வாசு (ஆச்சரியத்தோடு) : சரோஜினியா இது? நீ எப்படி வந்தாய்?

சரோஜினி : ஏன், நான் வந்ததிலே உங்களுக்கு என்ன ஆச்சரியம் ?

மாலதி : இவரைப்பற்றித்தனே அவர் சொன்ஞர்?

சரோஜினி : ஆமாம், என்னைப்பற்றித்தான் என் கணவர் சொல்லியிருப்பார்.

வாசு : இப்போ ராகவன் எங்கே?

சரோஜினி : எனக்கெப்படித் தெரியும்? நான் உங்களிடம் ஒரு உதவியை நாடி வந்தால் எனக்கே நீங்கள் தீமை செய்துவிட்டீர்கள்.

வாசு : நான் என்ன செய்தேன்...எனக்கு ஒன்றுமே புரியவில்லையே?

சரோஜினி : என் கணவர் எப்பொழுதுமே சந்தேகம் உடையவர். என்மீது சந்தேகங் கொண்டுதான் என்னைவிட்டுப் பிரிந்து இவ்வளவு காலமாக எங்கேயோ போய்விட்டார். அவருக்குள்ள சந்தேகத்தைப் போக்கி, எங்களை ஒன்று சேர்க்க வேண்டுமென்றுதான் நான் உங்கள் உதவியை நாடினேன்.

மாலதி : இவர் எப்படி உங்களுக்கு இந்த விஷயத்திலே உதவி செய்ய முடியும்?

சரோஜினி : உங்கள் கணவர் நினைத்தால் அது முடிந்திருக்கும். இவர் மிகவும் நல்லவர் என்று எல்லோருக்கும் தெரியும். என் கணவரும் அறிவார். ஆதலால் இவர் வார்த்தையை அவர் ஏற்றுக்கொள்வார் என்றுதான் இவரைத் தேடி வந்தேன். கடைசியில் இவரே எனக்குத் தீமை செய்துவிட்டார்.

வாசு : நான் என்ன செய்துவிட்டேன்? உங்கள் வீட்டுக்கு ஒரு தடவை வந்ததைத் தவிர வேறு என்ன குற்றம் செய்தேன்?

சரோஜினி : நமக்குள்ள ஏதோ தொடர்பு இருக்கிறதாகச் சற்று முன்னே அவர் உங்களிடம் சொன்னாராம். நீங்கள் அதை மறுக்கவே இல்லையாம். அதனால் அவர் மறுபடியும் என்னைவிட்டுப் போகப் போகிறார். அதை என்னிடம் சொல்லுவதற்காகத்தான் உங்கள் வீட்டிலிருந்து அவசரமாக வந்தாராம்.

வாசு : ராகவன் சொன்ன விஷயத்தையெல்லாம் கேட்டபோது எனக்கு என்ன சொல்லுவதென்றே புரியவில்லை. அதனால் நான் என்ன பேசினேனென்று இப்பொழுது சொல்ல முடியாது. அவர் உங்கள் உயிருக்கே...

சரோஜினி : எப்படிப் பார்த்தாலும் எனக்கு இனிமேல் வாழ்க்கையில்லை. நான் செய்த முயற்சியெல்லாம் பாழாய்விட்டது.

வாசு . நான் அவரைச் சந்தித்து உண்மையை நன்றாக விளக்கிச் சொல்கிறேன். நீங்கள் வருத்தப்பட வேண்டாம்.

சரோஜினி: இனிமேல் நீங்கள் சொல்ல முடியாது; சொன்னாலும் அதனால் எவ்விதமான பிரயோசனமும்

இல்லை. அவர் போய்விட்டார். இனி அவரைப் பார்க்க முடியாது.

மாலதி (ஆவலோடு): இல்லை; அவர் இங்கே வருவதாகச் சொல்லிவிட்டுப் போனார்.

சரோஜினி (ஆச்சரியத்தோடு): அப்படியா? அப்படியானால் நான் இங்கு வந்த விஷயத்தை அவருக்குச் சொல்லாதீர்கள். நான் உடனே போய்விடுகிறேன். அவர் வந்ததும் எப்படியாவது அவரைச் சமாதானப் படுத்துங்கள்.

வாசு: என்னால் இயன்றதையெல்லாம் செய்கிறேன். இந்த விஷயத்திலே கலந்துகொள்ள முதலில் எனக்கு இஷ்டமில்லையென்றாலும் இனிமேல் கலந்து கொள்ளாமல் இருக்க முடியாது.

சரோஜினி: அவரோடு நான் சேர்ந்து வாழ நீங்கள்தான் எப்படியாவது உதவி செய்ய வேணும்.

மாலதி: நானும் என்னாலானதைச் செய்கிறேன். நீங்கள் கவலைப்பட வேண்டாம்.

சரோஜினி: சரி, நான் வருகிறேன். உங்கள் இரண்டு பேரையுமே நம்பிப் போகிறேன். நான் இங்கு வந்ததை அவரிடம் சொல்லாதீர்கள்.

வாசு: இப்பொழுது எங்கே போகிறீர்?

சரோஜினி: என் வீட்டிற்குத்தான் போகிறேன்.

வாசு: சரி, ஜாக்கிரதையாகப் போய்ச் சேருங்கள். ராகவன் வந்தால் நான் பார்த்துக் கொள்கிறேன்.

[சரோஜினி போகிறாள்.]

மாலதி: இதென்ன ஆச்சரியமாக இருக்கிறதே... அந்த மனிதன் சொன்னதெல்லாம் பொய்யா?

வாசு (சந்தேகத்தோடு) : இதில் என்னவோ பெரிய சூழ்ச்சி இருக்கிறது.

மாலதி : இனி எந்தச் சூழ்ச்சியும் நம்மை ஒன்றும் செய்யாது...அப்பா, நான் பயந்தே போனேன்.

வாசு : பயந்தது மட்டுமா? அதோடு என் மேல் உனக்கு எத்தனை சந்தேகம்?

மாலதி : நான் சந்தேகப்பட்டது தப்புத்தான், என்னை மன்னித்துவிடுங்கள்.

வாசு: இந்தப் பெண்களுக்கு இத்தனை சந்தேகம் கூடாது. ஒரே நிமிஷத்திலே என்னைப் பெரிய பெரிய குற்றவாளியாக்கி விட்டாயே.

மாலதி : ஆண்களுக்கு மட்டும் இப்படி சந்தேகம் வராதா? அன்பிருந்தால் எல்லாம் வரும், அன்பு அதிகமானல் சந்தேகமும் அதிகம்.

வாசு : அந்த ராகவனும் இப்படி அன்பினுல்தான் சந்தேகப்பட்டு அலைகிறுனே?

[சோமசுந்தரம் வருகிருன். அவனுக்கு ஏறக்குறைய வாசுதேவன் வயதே இருக்கும். இளம் வயதிலிருந்து அவர்கள் நெருங்கிய நண்பர்கள்.]

சோமு : என்ன வாசு, பெரிய ஆராய்ச்சியிலே ஈடுபட்டிருக்கிறீர்கள் போலிருக்கிறதே? வெளிக்கதவு திறந்து கிடப்பதைக்கூட யாரும் கவனிக்கவில்லை.

வாசு : அடடே, நீ வந்ததைக்கூட நாங்கள் கவனிக்கவில்லை.

சோமு : என்ன அப்படி விசேஷம்?

மாலதி : உங்கள் நண்பர் ஒருத்தியைச் சுட்டுக் கொன்று விட்டாராம். அதைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கும் போது அவள் இங்கே உயிரோடு வந்து நின்ருள்.

சோமு (சிரித்துக்கொண்டே): இதென்னடா வேடிக்கை? ஏண்டா வாசு, ஏதாவது கனுக்கண்டாயா?

வாசு : இல்லடா, அந்த சரோஜினிக்கு உதவி செய்யப் போய் பெரிய விபரீதம் வந்து சேர்ந்தது. மாலதி என்னிடம் பெரிய யுத்தம் ஆரம்பிக்கத் தயாராக இருந்தாள்.

சோமு (யோசனையோடு): சரோஜினியா?

மாலதி : ஆமாம், அப்படி ஒரு சிங்காரி வந்தாள். எந்த ஆண்பிள்ளையையும் மயக்கிவிடுவாள். அப்படி ஆடம்பரம்.

வாசு : எத்தனை அழகியாக இருந்தாலும் சோமுவை மயக்க முடியாது. அவன்தான் கட்டைப் பிரம்மச் சாரியாச்சே.

சோமு : அடே, விஷயத்தைச் சொல்லாமல், என்னவோ என்னைப் பற்றி ஆரம்பித்துவிட்டாயே...எந்த சரோஜினி?

வாசு : சரோஜினி உனக்குத் தெரியாது. அவள் புருஷன் ராகவனுக்கும் அவளுக்கும் ஏதோ மனஸ்தாபம்.

சோமு (ஆச்சரியத்துடன்) : ராகவனு? அவன் இங்கே எப்படி வந்தான்?.

வாசு : அவன்தான் திடீரென்று இன்றைக்கு வந்து சேர்ந்தான். அதோடு அந்த சரோஜினியைச் சுட்டுக் கொன்றதாக என்மீது கொலைக் குற்றமும் சாட்டிப் பயமுறுத்தினன்.

மாலதி : கடைசியிலே அந்த சரோஜினியும் ராகவனும் பிரிந்து போய்விட்டார்கள். இனிமேல் அவள் முகத்திலேயே விழிக்கிறதில்லையென்று சொல்லிவிட்டு ராகவன் போய்விட்டானும்.

சோமு : அவர்கள் இரண்டு பேரையும் இப்போ நான் ஜோடியாகப் பார்த்தேனே...ஒரே காரில் குஷியாகப் போய்க்கொண்டிருந்தார்கள்.

வாசு : உனக்கும் அவர்களைத் தெரியுமா?

மாலதி : ஒரே காரில் போனார்களா? அது இன்னும் வேடிக்கையாக இருக்கிறது.

[அறையின் மற்றொரு கோடியிலிருந்த டெலிபோன் மணி அடிக்கும் சத்தம் கேட்கிறது.]

வாசு : அடே இந்த டெலிபோனுக்கு இப்போ என்ன அவசரம்? யாரோ கூப்பிட்டுத் தொலைக்கிறார்கள். (அவசரமாக போகிறான்) ஹலோ, ஹலோ, ஆமாம் நான்தான். யார் சோமசுந்தரமா? ஆமாம்; இங்கேதான் வந்திருக்கிறார் — அவரோடு பேச வேண்டுமா, வேண்டாமா? சரி...

[டெலிபோனை வைத்துவிட்டு வருகிறான்.]

சோமு : அடடே, அது யாரென்று கேட்காமல் ரிசீவரை வைத்துவிட்டாயே?

வாசு : நீ இங்கே இருக்கிறாயா என்று யாரோ கேட்டார்கள். அப்புறம் பேசவில்லை. சரி அதைப்பற்றி இப்போ என்ன கவலை?

சோமு : வாசு, நீ சுத்த முட்டாள். அது கேட்டது யார் தெரியுமா? அவன்தான் ராகவன். நான் அவனையும் சரோஜினியையும் ஒரே காரில் சென்றதைப் பார்த்

தேனல்லவா? பிறகு உன் வீட்டிற்கு வந்திருக்கிறேனு இல்லையா என்று தெரிந்துகொள்ள அவன் போன் பண்ணியிருக்கிருன்.

வாசு : அதெப்படி உனக்குத் தெரியும்?

சோமு : எல்லாம் தெரியும். இதில் ஏதோ பெரிய சூழ்ச்சி இருக்கிறது. சரோஜினி உன்னிடம் சொன்ன தெல்லாம் உண்மையல்ல.

மாலதி : எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. நீங்கள் உஷாராக இருக்கவேணும்.

சோமு : வாசு, இப்பொழுது நாம் உடனே என் பங்களா வுக்குப் போகவேணும்.

வாசு : அங்கென்னடா வேலை ? பங்களாவைத்தான் இழுத்துப் பூட்டிவிட்டு வந்திருப்பாயே? ராகவன் அதைத் தூக்கிக்கொண்டு போய்விடமாட்டான்.

சோமு : உனக்கு விஷயம் அப்புறம் சொல்லுகிறேன். உடனே புறப்படு. அவசியமானுல் போலீசுக்கும் தகவல் கொடுக்கவேண்டும்.

வாசு : அந்த ராகவன் இங்கே வருவதாகச் சொல்லி விட்டுப் போயிருக்கிருனே ?

சோமு : அவன் இனி இங்கு வரமாட்டான். அவன் முதலில் போட்டிருந்த திட்டம் தவறிவிட்டது.

வாசு (அலட்சியமாக) : என்னடா, பெரிய துப்பறியும் நிபுணனைப் போலப் பேசுகிருயே ? அவன் திட்டம் எப்படித் தவறிவிட்டது? மாலதிதான் பத்தாயிரம் கொடுக்கத் தயாராக இருக்கிருளே ?

சோமு : சரோஜினி உயிரோடிருக்கிற விஷயம் உனக்குத் தெரிந்த பிறகு பணம் கிடைக்குமென்று நினைக்க ராகவன் அத்தனை முட்டாள் அல்ல.

மாலதி : சரோஜினி திடீரென்று இங்கு வரமாட்டாள் என்று அவன் திட்டம் போட்டானு ?

சோமு : அப்படித்தான் எனக்குத் தோன்றுகிறது. அவன் எதிர்பார்த்தபடி இந்தத் தடவையும் அவள் வீட்டிற் குள்ளே அழுதுகொண்டு கிடக்கவில்லை. அதனுலே அவன் சூழ்ச்சி பலிக்கவில்லை.

வாசு : சோமு, நீ பிறந்ததும் ஷெர்லக் ஹோம்ஸ் இறந்து போய்ட்டான் தெரியுமா ? நீ இருக்கிற போது அவனுக்கு...

சோமு : இல்லை இல்லை, நீ பிறந்தபோதே அவன் தற் கொலை செய்து கொண்டான். அதுதான் உண்மை. இப்படி முட்டாள்கள் பிறந்திருக்கிறபோது தன் னுடைய துப்பறியும் திறமையெல்லாம் இருந்தாலும் பிரயோஜனமில்லையென்று அவனுக்குத் தெரியும்.

மாலதி : இந்த வாக்குவாதத்தை அப்புறம் வைத்துக் கொள்ளலாமே ? இப்போ ஆகவேண்டிய காரியத் தைக் கவனியுங்கள்.

சோமு : இனி ராகவனுடைய வேலை இங்கில்லை. அநேக மாக என் பங்களாவில்தான் நடக்கும்.

வாசு : ஏண்டா, உனக்கும் அவனுக்கும் என்னடா சம்பந்தம் ?

சோமு : உனக்கும் அவனுக்கும் எப்படிச் சம்பந்தம் வந்தது ?

வாசு : அப்போ, சரோஜினியை உனக்குத் தெரியுமா ? நீயும் அவளுக்காகச் சிபார்சுக்குப் போயிருக்கிருயா?

மாலதி : சரி சரி, நீங்கள் போர்க்குப் போனதே போதும். இப்போ நடக்கவேண்டியதைக் கவனிக்காமல் வெட்டிப் பேச்சும் தர்க்கமும் எதற்கு ?

வாசு : சரி வாடா, போவோம். மாலதி, இன்றைக்கு இதுவே பெரிய சினிமாவாகிவிட்டது. இந்தத் துப்பறியும் நிபுணரோடு நான் போய் வருகிறேன். நீ ஜாக்கிரதையாக இரு.

சோமு : மாலதியைப்பற்றிக் கவலை இல்லை. நம்ப ரெண்டு பேரைப் பற்றித்தான் இப்போ கவலையெல்லாம். நாம்தான் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

வாசு : உனக்கென்னடா இதிலே சம்பந்தம் ? மறுபடியும் உன்னையும் சேர்த்துப் பேசுகிறாயே ? என் மேல்தான் கொலைக் குற்றம் சாட்டினார்கள் ?

சோமு : உன்னோடு சிநேகமாக இருக்கிறேனே அது போதாதா ? அதெல்லாம் அப்புறம் பேசலாம். இப்போ நேரமில்லை, வா. அந்த சரோஜினி ஒரு பைத்தியம் — ராகவன் சொல்லுகிறபடியெல்லாம் செய்வாள்.

வாசு : மாலதி, ஏதாவது விஷயமென்றால் சோமு பங்களாவுக்கு உடனே போன் பண்ணு. இப்போ கதவைத் தாள் போட்டுக்கொள். ஜாக்கிரதை.

[இருவரும் போகிறார்கள்.]

மாலதி : நீங்கள் ஜாக்கிரதையாகப் போய் வாருங்கள்.

சோமு : மாலதி, வாசுவை நான் பார்த்துக் கொள்கிறேன். கவலைப்படாதே.

[அவர்கள் வெளியே போனதும் மாலதி கவலையோடு கதவைத் தாளிடுகிறாள். பிறகு உள்ளே நடமாடுகிறாள்.]

—திரை—

## காட்சி இரண்டு

[அதே அறை. திரை விழுந்து உடனே மேலெழு கிறது. மாலதி கவலையோடு ஒரு நாற்காலியில் அமர்ந்திருக்கிறாள். பிறகு எழுந்து நடக்கிறாள் வெளிக் கதவுப் பக்கத்திலிருந்து யாரோ கூப் பிடும் அறிகுறியாக மணி ஒலிக்கிறது. மாலதி திடுக்கிட்டு அப்பக்கம் பார்க்கிறாள்]

மாலதி (கவலையோடு): யாரது ?

ராகவன் (வெளியிலிருந்து): நான்தான் ராகவன். உங்க ளிடத்திலே ஒரு முக்கியமான விஷயம் சொல்ல வேணும்.

மாலதி (பயத்துடன்): வீட்டிலே அவரில்லை.

ராகவன் : வாசுதேவன் வீட்டில் இல்லை என்பது எனக்குத் தெரியும். உங்களிடந்தான் பேச வேணும். இது ரொம்ப அவசரமான காரியம். வாசுதேவன் நன்மைக் காகவே சொல்லுகிறேன்.

[மாலதி சற்று யோசனை செய்துவிட்டுப் பிறகு வேக மாகச் சென்று கதவைத் திறக்கிறாள். இருவரும் உள்ளே வருகின்றனர்.]

மாலதி : என்ன அப்படி அவசர விஷயம் ?

ராகவன் : சரோஜினியை நீங்கள் உயிரோடு சற்று முன்பு பார்த்தது உண்மைதான்.

மாலதி : இதைச் சொல்லவா இத்தனை அவசரமாக வந்தீர்கள் ?

ராகவன் : அவள் இப்பொழுது பிணமாகக் கிடக்கிறாள். இதைச் சொல்லவே வந்தேன்,

மாலதி: இதை என்னிடம் எதற்குச் சொல்லுகிறாய்? மறுபடியும் ஒரு சூழ்ச்சியா?

ராகவன் (உறுதியான குரலில்): முன்னால் நான் சொன்ன சாட்சியங்கள் எல்லாம் அப்படியே என்னிடம் இருக்கின்றன. இப்பவும் வாசுதேவன் தப்ப முடியாது.

மாலதி (கலவரத்தோடு): அட பாதகா, மறுபடியுமா இந்த நாடகம் நடத்த வந்துவிட்டாய்?

ராகவன்: முன்னால் நடந்தது வெறும் ஒத்திகை. இப்பொழுது நடப்பதுதான் உண்மை. உங்கள் புருஷனைத் தப்பவைக்க வேண்டுமானால் என்னுடைய நிபந்தனைகளுக்கு உட்பட வேண்டும். சுட்டுக் கொன்றது யாராக இருந்தாலும் சாட்சியங்களெல்லாம் அவரையே குற்றவாளியாகக் காட்டும். அதை நன்றாக மனத்தில் வைத்துப் பார்க்க வேண்டும்.

மாலதி: அந்தக் கடிதமும் கைத்துப்பாக்கியும் எங்கே? தோல் பை எங்கே?

ராகவன்: இதோ அவை என்னிடந்தான் இருக்கின்றன. (பையைக் காட்டுகிறான்) என்னுடைய நிபந்தனையை ஏற்றுக் கொள்ளாவிட்டால் இன்னும் பதினைந்து நிமிஷங்களில் கடிதமும் துப்பாக்கியும் சரோஜினியின் பிணத்தின் அருகே சாட்சியாகக் கிடக்கும். நானே போலீசில் பிராது கொடுப்பேன்.

மாலதி: என் கணவர் எந்தவிதமான குற்றமும் செய்யவில்லை. சரோஜினியையும் உன்னையும் சேர்த்து வைக்கவே உதவி செய்ய முன் வந்தார்.

ராகவன் : அதைப்பற்றியெல்லாம் பேசிக் கொண்டிருக்க இப்பொழுது நேரமில்லை. உங்கள் புருஷன்மேல் ஆசையிருந்தால் இந்த நிமிஷத்தில் நான் கேட்கிற பணத்தைக் கொடுக்கவேணும்.

மாலதி : பணம் கொடுத்தால்...?

ராகவன் : கடிதத்தையும் கைத்துப்பாக்கியையும் தோல் பையோடு உங்களிடம் கொடுத்துவிட்டுப் போய் விடுகிறேன்.

மாலதி : சரோஜினி இறந்தது பொய் ; அவள் உயிரோடு தானிருப்பாள்.

ராகவன் : சரி, இப்படி நீங்கள் பேசுவதாக இருந்தால் என்னுல் காத்திருக்க முடியாது. நான் போகிறேன். வருகிறதை வாசுதேவன் அனுபவிக்கட்டும். பிறருடைய குடும்ப விஷயத்தில் தலையிட்ட உங்கள் புருஷனுக்குச் சரியான தண்டனை கிடைக்கப் போகிறது. நான் புறப்படுகிறேன்.

[போவது போலத் திரும்புகிறுன்.]

மாலதி (பயத்தோடு) : ராகவன், உங்களுக்கு இப்பொழுது என்ன வேண்டும் ?

ராகவன் : பத்தாயிரம் ரூபாய் ரொக்கமாகக் கொடுத்தால் கடிதமும் துப்பாக்கியும் உங்கள் வசம் வரும். இதோ தோல் பையோடு கொடுக்கத் தயார்.

மாலதி : பத்தாயிரமா ? அவ்வளவு...

ராகவன் : அந்தத் தொகை வீட்டிலிருப்பது எனக்குத் தெரியும். பெட்டிச்சாவியும் உங்களிடம் இருக்கிறது. பணத்தைக் கொடுப்பதோடு உடனே இப்

பொழுது வாசுதேவனுக்குப் போன் செய்து அவரை யும் அவர் நண்பர் சோமசுந்தரத்தையும் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகாமல் தடுக்க வேண்டும். அதுவும் முக்கியமான நிபந்தனை.

மாலதி : அவர்கள் போலீஸ் ஸ்டேஷனுக்கு எதற்குப் போகிறார்கள் ?

ராகவன் : சோமசுந்தரத்தின் நோக்கம் எனக்குத் தெரியும். அவருடைய பங்களாவிற்கு இப்பொழுதே நீங்கள் போன் செய்யவேண்டும். இந்த இரண்டு நிபந்தனைகளையும் ஏற்றுக்கொண்டால் போதும்.

மாலதி (சந்தேகத்தோடு) : சரி, நான் சம்மதிக்கிறேன். எப்படியும் என் கணவர் இந்தத் தொல்லையிலிருந்து விடுபட்டால் போதும். ஆனல் பணத்தை உங்களிடம் கொடுத்த பிறகு நீங்கள்.........

ராகவன் : கடிதத்தையும், துப்பாக்கியையும் கொடுக்க மாட்டேனென்று சந்தேகமா ? கடிதத்தையும் துப்பாக்கியயையும் முதலில் உங்களிடம் கொடுத்து விடுகிறேன். பிறகு பணம் கொடுத்தால் போதும். உங்களை நான் நம்ப முடியும். நீங்கள் இந்தச் சமயத்தில் ஏமாற்றவும் முடியாது. பணம் கொடுத் ததும் வாசுதேவனுக்குப் போன் செய்யவேணும்.

மாலதி : சரி, எங்கே கடிதமும், துப்பாக்கியும் ?

ராகவன் : இதோ எடுத்துக்கொள்ளுங்கள், உங்கள் வார்த்தையில் எனக்கு நம்பிக்கை உண்டு. துப்பாக்கி யிலிருந்த ஐந்து தோட்டாக்களில் ஒன்று காலியாகி விட்டது. மற்ற நான்கையும் நான் எடுத்துக் கொண்டு விட்டேன். தோட்டாக்களோடு மட்டும்

நான் கொடுக்கத் தயாராக இல்லை. எதற்கும் நான் எச்சரிக்கையாக இருக்க வேண்டுமல்லவா ?

மாலதி : சரி, கொடு இங்கே.

ராகவன் : இதோ.........

*[ராகவன் தோல் பையைக் கொடுக்கிறான். மாலதி அதை வாங்கிக்கொள்கிறாள்.]*

—திரை—

## காட்சி மூன்று

*[சோமசுந்தரத்தின் பங்களாவில் ஒரு விசாலமான அறை. நாகரிகமாக அணி செய்யப்பட்டுள்ளது. ஒரு பக்கத்திலே டெலிபோன் இருக்கிறது. சோமுவும், வாசுவும் அருகில் அமர்ந்திருக் கிறார்கள்.]*

சோமு : வாசு, ராகவன் முதலில் உன்னை ஏமாற்றப் பார்த்தான். எதிர்பாராத விதமாக அது தப்பிப் போய்விட்டது. இப்பொழுது அவன் மாலதியை ஏமாற்றிவிட்டான்.

வாசு : அதே கொலைக் குற்றத்தைச் சாட்டி அவளையும் பயமுறுத்தியிருக்கிறான்.

சோமு : உன்னுடைய கடிதத்தையும், கைத் துப்பாக்கி யையும் எப்படியாவது வாங்கிக்கொள்ள வேண்டு மென்று மாலதி எண்ணியிருக்கிறாள். அவள் பணத்தைப் பெரிதாக மதிக்கவில்லை.

வாசு : நாம் அவளைத் தனியாக விட்டுவிட்டு வந் திருக்கவே கூடாது.

சோமு : நான்தான் உன்னை இங்கு வரும்படி சொன்னேன். அதற்கு முக்கியமான காரணம் உண்டு.

வாசு : இப்போ நாம் உடனே மாலதியைப் பார்க்க வேண்டும். அவள் ரொம்பக் கவலைப்பட்டுக் கொண்டிருப்பாள்.

சோமு : அவள் இப்பொழுது கவலைப்படக் காரணமில்லை. அவள்தான் இந்த ராகவனுடைய தொல்லையைப் பத்தாயிரம் கொடுத்துத் தீர்த்துவிட்டதாக நினைத்துக் கொண்டிருக்கிறளே ?

வாசு : அவள் நம்மை அங்கு வரும்படி இப்பொழுது போன் பண்ணவில்லையா ?

சோமு : அவள் வரும்படி சொன்னது எதனுல் தெரியுமா?

வாசு : எதனுலிருந்தால் என்ன ? நாம் போகலாம்.

[அவசரமாக எழுந்திருக்கிறன்.]

சோமு : அடே, அந்த ராகவன்தான் மாலதியை அப்படி நமக்குச் சொல்லும்படி கட்டாயப்படுத்தியிருப்பான். ஆகையால் நாம் கொஞ்சம் யோசனை செய்து என்ன செய்வதென்று தீர்மானிக்க வேண்டும்.

வாசு : ராகவன் பணத்தை வாங்கிக்கொண்டு அவசரமாகப் போய்விட்டதாகச் சொன்னுளே ?

சோமு : அப்படிச் சொல்லும்படி ராகவன் கட்டாயப் படுத்தியிருப்பான். அவனுக்கு இரண்டு காரியங்கள் நடைபெற வேண்டும். ஒன்று நாம் போலீசுக்குத் தகவல் கொடுக்கக் கூடாது. இரண்டாவது நாம் உன் வீட்டிற்குப் போய் அங்கேயே இருக்கவேண்டும்.

வாசு : அடே, நீ பெரிய சூரப்புலி. கண்டுபிடித்து விட்டாய். அவனுக்குத்தான் பத்தாயிரம் கிடைத்து விட்டது. அதை எடுத்துக்கொண்டு உடனே எங்காவது ஓடியிருப்பான்.

சோமு : நீ சொல்லுகிறபடி நடந்தால் சரோஜினி விஷயம் என்னவாகிறது ?

வாசு : அவள்தான் பிணமாகிவிட்டாளே ?

சோமு : அவள் பிணமாகி இருக்க முடியாது.

வாசு : அவளை என் கைத் துப்பாக்கியாலேயே சுட்டு விட்டதாக ராகவன் கூறியிருக்கிறுனே? இரண்டாந் தடவையும் அவன் பொய் சொல்லியிருக்க முடியுமா?

சோமு : முடியும். ஆயிரந்தடவை பொய் சொல்ல அவன் அஞ்சமாட்டான்.

வாசு : அடே, என்னவோ பேசிக்கொண்டே காலத்தை ஓட்டுகிறுய். உடனே காரியம் செய்யாவிட்டாலும் ராகவன் நம்மை ஏமாற்றி விடுவான் என்கிறுய். எனக்கு உன் விஷயமே புரியவில்லை. நீ வேண்டு மானுல் இங்கேயே இரு. நான் வீட்டுக்குப் போகிறேன்.

[டெலிபோன் மணி அடிக்கிறது. வாசுதேவன் ரிசீவரை எடுக்க ஆவலோடு போகிறுன். சோமசுந்தரம் அவனைத் தடுக்கிறுன் ]

சோமு : வாசு, அதைத் தொடாதே. பேசாமல் இரு

வாசு : ஏண்டா ? மாலதி ஒருவேளை என்னைக் கூப் பிடுவாள்.

சோமு : கூப்பிடுவது மாலதி அல்ல. ராகவன்தான் இந்த வேலை செய்கிறுன். நாம் இங்கே இருக்

கிறேமா அல்லது போய்விட்டோமா என்று பார்க்க இந்த யுக்தி எடுத்திருக்கிறன்.

வாசு : ஒருவேளை மாலதியாக இருந்தால்? அவளுக்கு ஏதாவது ஆபத்து...

சோமு : அவளுக்கு ஒன்றும் வராது. நாம் உடனே மாலதியைப் பார்க்கப் போவோம் வா.

வாசு : அப்பா, இதைத்தாண்டா அப்போபிடிச்சு நான் செல்லுகிறேன்.

சோமு: இப்பொழுதுதான் எனக்கு எல்லாம் தெளிவாகத் தெரிகிறது. நாம் உன் வீட்டிலே இருப்பதுபோல நடிக்கவேண்டும். பின்புறத்துக் கொல்லை வழியாக அங்கிருந்து வெளியேறிப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போக வேண்டும். போலீஸ் இன்ஸ்பெக்டரைக் கூட்டிக்கொண்டு மறுபடியும் இங்கே வரவேண்டும்.

வாசு : மறுபடியும் இங்கேயா?

சோமு: ஆமாம்; இங்கேயேதான். ஆனல் இந்த அறையில் அல்ல. அதோ அந்தச் சிறிய அறையில் நாம் ஒளிந் திருக்கப் போகிறேம்.

வாசு : என்னடா எனக்கு நீ சொல்வது ஒன்றுமே புரிய வில்லை.

சோமு : புரியாவிட்டால் பரவாயில்லை. வா, உடனே காரியத்தில் இறங்குவோம். இல்லா விட்டால் சரோஜினியைக் காப்பாற்ற முடியாது.

வாசு (திடுக்கிட்டு): சரோஜினியையா? மாலதி?...

சோமு : அடே வாடா, மாலதியைத்தான் இப்போ பார்க்கப் போகிறேமே!

[சோமசுந்தரம் அவசரமாக வெளியே புறப்படு கிறன். வாசுதேவன் ஒன்றும் புரியாமல் திகைப் புடன் பின்னல் செல்லுகிறன்.]

வாசு : பங்களாவைப் பூட்டப் போகிறயா? இல்லேயா? சாவி எங்கே ?

சோமு : எல்லாம் இருக்கிறது வா? அதுகூட எனக்குத் தெரியாதா ?

[இருவரும் விளக்கை அணேத்துவிட்டு வெளியேறு கிறர்கள். டெலிபோன் மணி அடித்துக் கொண்டே இருக்கிறது. அதை யாரும் கவனிக்க வில்லே.]

[திரை]

## காட்சி நான்கு

[அதே மாலே நேரம். சரோஜினியின் வீடு. முன் பக்கத்திலுள்ள ஒரு ஹால். ராகவனும் சரோஜி னியும் அமர்ந்து பேசிக் கொண்டிருக்கிறர்கள். மின்சார விளக்கு ஒன்று மட்டும் மங்கலாக எரிகிறது. டெலிபோன் பக்கத்திலிருக்கிறது.]

ராகவன் : சரோஜினி, அந்த பங்களாவைப் பார்க்கலாமா?

சரோஜினி : எந்தப் பங்களாவை?

ராகவன் : சோமசுந்தரத்தின் பங்களாவைத்தான். உன் னிடம் சாவி இருப்பதாகச் சொன்னயே?

சரோஜினி : சாவி இருக்கிறது. ஆனல் சோமசுந்தரம் இல்லாத சமயத்தில் அங்கே போவது நல்லதா என்று தான் யோசிக்கிறேன்.

ராகவன் : அவனைப்பற்றி உனக்கென்ன கவலை?

சரோஜினி : நாம் பங்களாவுக்குள் இருக்கும்போது ஒரு வேளை அவர் திரும்பி வந்துவிட்டால்?

ராகவன் : அவன் இப்போது வரமாட்டான். வாசு தேவன் வீட்டில்தான் இருப்பான்.

சரோஜினி : நாம் இரண்டு பேரும் உடனே இந்த ஊரை விட்டுப் போய்விடுவது நல்லது.

ராகவன் : எதற்காக அப்படிப் பயப்படுகிறாய்?

சரோஜினி : நான் உயிரோடிருப்பதாக அவர்களுக்குத் தெரியக்கூடாது. தெரிந்தால் உங்கள்மேல்...

ராகவன் : என்னை என்ன செய்ய முடியும்?

சரோஜினி ; மாலதியிடம் வாங்கிய பணம்?

ராகவன் : அதைப்பற்றி வாசுதேவன் வெளியில் சொல்லவே விரும்ப மாட்டான். போலீசில் அவன் பிராது கொடுத்தால் அவனுடைய கெட்ட நடத்தை வெளியாகிவிடும்.

சரோஜினி (கெஞ்சிய குரலில்) : ராகவன், நான் சத்தியமாகச் சொல்லுகிறேன். வாசுதேவன் எவ்விதமான கெட்ட நடத்தையும் உடையவரல்ல. என்னைப் பற்றியும் நீங்கள் சந்தேகிக்கக் கூடாது.

ராகவன் : பிறகு அவனுக்கு உன் வீட்டில் என்ன வேலை? இங்கே அவன் எதற்காக வந்தான்?

சரோஜினி : நான்தான் அவர் உதவியை நாடினேன். அவரும் இன்றுதான் முதல் தடவையாக வீட்டிற்கு வந்தார்.

ராகவன் . அவனிடம் உன் வரலாறெல்லாம் சொல்லி விட்டாயா?

சரோஜினி : ஒன்றுமே சொல்லவில்லை. என்னை எப்படி யாவது உங்களோடு சேர்த்து வைக்க உதவவேண்டும் என்றுதான் கேட்டுக்கொண்டேன்.

ராகவன் . பிறகு அந்தத் துப்பாக்கி எப்படி உன்னிடம் வந்தது? உங்களுக்குள் நெருங்கிய உறவில்லா விட்டால் கைத் துப்பாக்கியை அவன் உன்னிடம் கொடுப்பானு?

சரோஜினி : அவர் இங்கே வந்தபோது கைப் பெட்டியை அவசரத்திலே வைத்துவிட்டுப் போய்விட்டார். நான் அதைப்பற்றி அவருக்குத் தகவல் கொடுக்கப் போன தைத்தான் நீங்கள் வந்து தடுத்துவிட்டீர்கள்.

ராகவன் : அப்படி அவனுக்கு என்ன அவசரம் ? இதெல்லாம் கட்டுக்கதை. நான் நம்பவே மாட்டேன்.

சரோஜினி : என் வீட்டிற்கு வந்ததே அவருக்குப் பிடிக்க வில்லை என்று தெரிந்தது. அதனுல் சீக்கிரமாகப் போய்விட்டார்.

ராகவன் : சோமசுந்தரம் விஷயம் அவனுக்குத் தெரியுமா?

சரோஜினி : தெரியாதென்றுதான் எனக்குத் தோன்று கிறது.

ராகவன் : எதனுலே ?

சரோஜினி : என்னுடன் பேசியதிலிருந்து எனக்குத் தெரிந்தது. அந்த விஷயம் தெரிந்திருந்தால் வாசு தேவனுடைய பேச்சிலேயே அது வெளிப்பட் டிருக்கும்.

ராகவன் : சோமசுந்தரம் தன் நண்பனிடத்தில் சொல்லாமல் இருப்பானு ?

சரோஜினி : அவர் சொல்ல மாட்டார்.

ராகவன் : நீயும் சொல்லவில்லையா ?

சரோஜினி : இல்லை. முதல் தடவையாகச் சந்திக்கும் போதே எல்லா விஷயமும் அவரிடம் பேச எனக்கு இஷ்டமில்லை.

ராகவன் . சரி, சோமு பங்களா சாவி எங்கே ?

சரோஜினி : அடுத்த அறையிலே இரும்புப் பெட்டியில் இருக்கிறது.

ராகவன் : உன்னிடமுள்ள சாவிக்கொத்தில் இல்லையா ?

சரோஜினி : அதை நான் தொடுவதே இல்லை. அவர் கொடுத்தது முதல் என் இரும்புப் பெட்டியில் எங்கேயோ கிடக்கிறது. எனக்கு அதனுல் என்ன பிரயோசனம் ?

ராகவன் : இப்படி எல்லாம் என்னை ஏமாற்ற முடியாது— இப்பொழுது உடனே எனக்கு அந்தச் சாவி வேண்டும்.

சரோஜினி : இதோ எடுத்து வருகிறேன்.

ராகவன் : உடனே எடுத்துவா—பங்களாவைப் பார்த்து விட்டுப் பிறகு ஒரு நிமிஷங்கூடத் தாமதிக்க முடியாது.

சரோஜினி (ஆவலோடு) : நாம் வெளியூர் போய் விடலாமா ?

ராகவன் : அதைப்பற்றி அப்புறம் பேசலாம். இப்போ சாவியைக் கொண்டுவா.

*[சரோஜினி அவசரமாக உள் அறைக்குப் போகிறாள். அவள் சென்றதை நன்கு பார்த்துவிட்டு ராகவன் டெலிபோனில் பேசுகிறான்.]*

ராகவன் : ஹலோ, நான் ராகவன் பேசுகிறேன். யார் மாலதிதானே ? வாசுதேவன் எங்கே ? மேல் மாடியிலா ?...அவருக்கு இனிமேல் ஒரு பயமும் இல்லையென்று சொல்லுங்கள். அதற்குத்தான் கூப்பிட்டேன்—அவர் என்ன செய்துகொண்டிருக்கிறார்?...என்ன? அவரும் சோமசுந்தரமும் சதுரங்கம் ஆடிக்கொண்டிருக்கிறார்களா ?—சரி, சரி. அவர்களை இப்போ தொந்தரவு செய்யாதீர்கள்—கூப்பிட வேண்டாம். நான் சொன்ன விஷயத்தை மட்டும் சொல்லிவிட்டால் போதும்—நான் விமான நிலையத்திலிருந்துதான் பேசுகிறேன்—இன்னும் பத்து நிமிஷத்தில் விமானம் புறப்படும். நமஸ்காரம்.

*[ரிசீவரை வைத்துவிட்டு ராகவன் நடமாடுகிறான். சற்று நேரத்தில் சாவிக் கொத்தோடு சரோஜினி வருகிறாள் ]*

ராகவன் : இந்தச் சாவியைக் கொண்டுவர இவ்வளவு நேரமா ?

சரோஜினி : அது எங்கேயோ கிடந்தது. உடனே கிடைக்கவில்லை.

ராகவன் : சரி, வா போவோம்.

சரோஜினி : ஒரு டாக்ஸி கூப்பிடட்டுமா ?

ராகவன் : பக்கந்தானே டாக்ஸி எதற்கு ?

சரோஜினி : அப்பவும் அரைமைல் தூரமாவது இருக்கும்,

ராகவன் : பரவாயில்லை. அங்கிருந்து வேண்டுமானால் விமான நிலையத்திற்கு டாக்ஸி வைத்துக் கொள்வோம்.

சரோஜினி : விமான நிலையத்திற்கா ?

ராகவன் : ஆமாம். இரவு 9½ மணி விமானத்தில் புறப்படவேண்டும்.

சரோஜினி (ஆவலோடு) : டெல்லிக்கா, பம்பாய்க்கா ?

ராகவன் : அதெல்லாம் அப்புறம் சொல்லுகிறேன். வா போவோம்.

*[அவசரமாக வெளியே போகிறார்கள்.]*

—திரை—

## காட்சி ஐந்து

*[சோமசுந்தரத்தின் பங்களாவில் ஒரு சிறிய அறை. ஒரே இருட்டு. அதில் சோமசுந்தரம், வாசுதேவன், போலீஸ் இன்ஸ்பெக்டர் ஆகிய மூவரும் பக்கம் பக்கமாக நாற்காலியில் அமர்ந்திருக்கிறார்கள்.]*

வாசு : சோமு, நீ செய்கிறதெல்லாம் வேடிக்கையாக இருக்கிறது. எங்களை எதற்காக இந்த அறையிலே இப்படி அடைத்து வைத்திருக்கிறாய் ? விளக்கையாவது போடக்கூடாதா ? நல்ல வேடிக்கை.

சோமு : இதில் வேடிக்கை ஒன்றுமில்லை. ராகவனும் சரோஜினியும் கட்டாயம் இங்கு வருவார்கள். என் பங்களாவில் ஒரு பெரிய நாடகம் நடக்கப் போகிறது.

வாசு : உன் பங்களாவிற்குள் அவர்கள் எப்படி நுழைய முடியும்? நீதான் பங்களாவை வெளியில் பூட்டி வைத்திருக்கிறாயே!

இன்ஸ்பெக்டர் : சோமு, எங்களை உள்ளே வைத்து விட்டு வெளியே சென்று எல்லாக் கதவுகளையும் பூட்டிவிட்டீர்கள். பிறகு நீங்கள் எப்படி உள்ளே வர முடிந்தது?

சோமு : பின்புறம் உள்ள ஒரு கதவை மட்டும் இரண்டு பக்கத்திலிருந்தும் பூட்டலாம். அந்த மாதிரி பூட்டு வைத்திருக்கிறேன். அதன் வழியாக உள்ளே வந்து வெளியிலிருந்து பூட்டியது போலவே பூட்டி விட்டேன்.

வாசு : அது சரியடா, நீதான் இந்தத் தந்திரம் செய்து உள்ளே வந்துவிட்டாய். ராகவனும் சரோஜினியும் எப்படி உள்ளே வரமுடியும்?

சோமு : இந்த பங்களாவுக்கு சரோஜினியிடம் சாவியிருக்கிறது. அவள் நினைத்தால் எந்த அறைக்குள் வேண்டுமானாலும் நுழையலாம்.

வாசு : இதென்னடா ? இது இன்னும் வேடிக்கையாக இருக்கிறதே? உன்னுடைய பங்களாவுக்கு அவளிடம் சாவி எப்படி இருக்கும்?

சோமு : அதைப்பற்றி யெல்லாம் இப்பொழுது எதற்குக் கேட்கிறாய்? நான் சொல்லுகிறபடி இன்னும் ஒரு மணி நேரம் கேளேன்.

வாசு : அடே, எத்தனை மணி நேரமானாலும் நான் இங்கே அடைபட்டுக் கிடக்கத் தயார். ஆனால்

போலீஸ் இன்ஸ்பெக்டரையும் இப்படி அடைத்து வைத்திருக்கிருயே? அதுதான் எனக்குக் கவலே. மின் சார விளக்கையும் போடக்கூடாதென்கிருய்.

சோமு (இன்ஸ்பெக்டரைப் பார்த்து): ஏன் ஸார், உங் களுக்குச் சிரமமாக இருக்கிறதா?

இன்ஸ்: சிரம மொன்றுமில்லே. நான் இருக்கத் தயார். ஆனுல், இதனுல் என்ன கண்டு பிடிக்கப் போகிருேம் என்பதுதான் எனக்கு விளங்கவில்லே.

வாசு: அதுதான் எனக்கும் விளங்கவில்லே. இவன் ஏதோ மர்மமாகப் பேசுகிருன்.

சோமு: ராகவன் மிகத் தந்திரசாலி. அவனேக் கையுங் களவுமாகப் பிடிப்பதற்கு இது ஒன்றுதான் வழி யென்று எனக்குத் தோன்றுகிறது.

இன்ஸ்: ராகவன்மேல் உங்களுக்கென்ன சந்தேகம்.

சோமு: அவனுக்குப் பணம் ஒன்றுதான் குறி. சரோஜினி யைப் பற்றி அவனுக்கு அக்கறையே இல்லே. அவளே அவன் கலியாணம் செய்து கொள்ளவேமாட்டான். அவள்தான் அவனிடத்திலே மயங்கிக் கிடக்கிருள்.

வாசு: அப்படியே இருக்கட்டும். அதற்கும் நானும் போலீஸ் இன்ஸ்பெக்டரும் உன்ேேடு சேர்ந்து இந்த அறையிலே அடைபட்டுக் கிடப்பதற்கும் என்ன சம்பந்தம்?

சோமு: சரோஜினியை ஏமாற்றுவதற்குக் கடைசியாக இந்த பங்களாவைத்தான் ராகவன் உபயோகிக்கப் போகிருன்?

இன்ஸ்: எதனுல் நீங்கள் அப்படி நினேக்கிறீர்கள்?

வாசு : இது ஏமாற்று வித்தைக்குப் பேர்போன இடம்— ஏண்டா சோமு, அப்படித்தானே?

சோமு : வாசு, உன்னுடைய கேலியெல்லாம் இப்போ வேண்டாம். இந்த பங்களா சரோஜினிக்குச் சொந்தம். அது தெரிந்தால் நீ இப்படிப் பேச மாட்டாய்.

வாசு (திடுக்கிட்டு) : இது உன்னுடையதல்லவா?

சோமு : என்னுடையதாகத்தான் இருந்தது. நான் இதை சரோஜினிக்கு உரிமையாக்கி எழுதிக் கொடுத்து விட்டேன்.

வாசு : ஏண்டா நீ சுயபுத்தியோடுதான் பேசுகிருயா? நீ சொல்லுவதெல்லாம் பயித்தியப் பேச்சாக இருக்கிறது.

சோமு : இன்ஸ்பெக்டர் ஸார், நான் இதைப்பற்றியெல்லாம் இதற்கு முன்பு யாரிடமும் பேசியதில்லை. இப்பொழுதும் பேச விரும்பவில்லை. ஆனல் இந்த வாசு இருக்கிருனே, இவன்தான் என் வாயைப் பிடுங்குகிருன்.

[பக்கத்திலுள்ள பெரிய அறையிலிருந்து டெலிபோன் மணி அடிக்கும் சத்தம் கேட்கிறது ]

யார் இந்தச் சமயத்திலே டெலிபோனில் கூப்பிடுவது ? இன்ஸ்பெக்டர் ஸார் நீங்கள் வாசுவோடு பேசிக்கொண்டிருங்கள். நான் ஒரு நொடியில் வந்துவிடுகிறேன்.

[அவசரமாகப் பக்கத்து அறைக்குப் போகிருன்.]

இன்ஸ் : மிஸ்டர் வாசு, உங்கள் நண்பர் சோமுவுக்கும் அந்த சரோஜினிக்கும் ஏதாவது தொடர்பு இருக்க வேண்டும்.

வாசு (சட்டென்று) : அதெல்லாம் ஒன்றுமில்லை ஸார். இவன் பிரம்மச்சரிய விரதம் பூண்டவன். ஒரு அரைப் பைத்தியம்.

இன்ஸ் : நான் அந்தமாதிரி தொடர்பைக் குறிக்கவில்லை. சரோஜினியை உபயோகப்படுத்தி உங்களிடம் பணம் பறிக்க் ராகவன் திட்டமிட்டதைப் போலவே சோமுவையும் சரோஜினியைக் கொண்டு ஏமாற்றி யிருப்பான்.

வாசு : நீங்கள் எதனால் அப்படி நினைக்கிறீர்கள் ?

இன்ஸ் : இல்லாவிட்டால் சோமு எதற்காக இந்தப் பங்களாவை அவளுக்கு எழுதிக் கொடுக்கிறார் ?

வாசு : அதுதான் எனக்கும் விளங்கவில்லை. மேலும் இந்த விஷயத்தைப் பற்றி அவன் என்னிடம் இது வரையில் சொல்லவே இல்லை. அவன் எதையும் என்னிடம் ஒளிக்கமாட்டான்.

இன்ஸ் : சோமு ஏதோ சூழ்ச்சியில் அகப்பட்டு எழுதிக் கொடுத்திருப்பார். ராகவன்தான் சூழ்ச்சி செய் திருக்க வேண்டும். தன்மேல் சந்தேகம் வராதபடி பங்களாவை சரோஜினி பேரில் எழுதி வாங்கி யிருக்கிறான். இப்பொழுது அதையும் தனக்கு மாற்றிக்கொண்டுவிட்டான்.

வாசு : ஆனால், சரோஜினியை சோமு தெரிந்திருக்க சமயமே இல்லையே ?

இன்ஸ் : சோமுவும் உங்களோடுதானே படித்தார் ?

வாசு : படித்தாலும் அவன் போக்கே வேறு மாதிரி. எப்பொழுதுமே கிருக்கனைப் போலக் கனாக் கண்டு கொண்டிருப்பான்.

[சோமு அவசரமாகவும் மகிழ்ச்சியோடும் பேசிக் கொண்டே நுழைகிறான்.]

சோமு : டேய் வாசு, மாலதி ரொம்பக் கெட்டிக் காரியடா — உன்னைப் போல மக்கில்லை.

வாசு : டெலிபோனில் இந்த உண்மை உதயமாச்சோ?... இதுவரையிலும் டெலிபோன் இப்படிச் சொல் லியதை நான் கேட்டதில்லை.

சோமு : மாலதி என்ன சொல்லியிருக்கிறாள் தெரியுமா ?

வாசு : யாரிடத்திலே ?

சோமு : அந்த ராகவனிடந்தான்.

வாசு (திடுக்கிட்டு) : மறுபடியுமா அவன் என் வீட்டிற்கு வந்தான் ?

சோமு : வீட்டிற்கு வரவில்லை. போன் மூலம் பேசினானாம். நாம் இரண்டு பேரும் எங்கே என்று தந்திரமாக விசாரித்திருக்கிறான்.

வாசு : மாலதி என்ன சொன்னாள் ?

சோமு : உன் வீட்டிலே மேல் மாடியிலே வழக்கம் போல நாம் இரண்டு பேரும் சதுரங்கம் ஆடிக்கொண்டிருப்ப தாகச் சொல்லியிருக்கிறாள்.

வாசு : எதற்கு அப்படிச் சொன்னாள் ? தனியாக இருப்ப தாகத் தெரியக் கூடாதென்று சொல்லியிருப்பாள்.

சோமு : எதற்காகச் சொன்ஞளோ தெரியாது. ஆனுல், அதுதான் சரியான பதில்—இனி நாம் எச்சரிக்கை யாக இருக்க வேண்டும். இன்ஸ்பெக்டர் ஸார், என்னுடைய பிளான் வெற்றியடையப் போகிறது. மாலதி நல்ல சமயத்தில் உதவியிருக்கிருள். அவளுடைய பயமோ அல்லது அறிவு தீட்சண்யமோ எதுவானுலும் அது எனக்கு வெற்றியளிக்கப் போகிறது.

[ஜன்னல் வழியாக வெளியே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் சட்டென்று பேசத் தொடங்குகிருர்.]

இன்ஸ் (தணிந்த குரலில்) : சோமு, இங்கே கவனித் தீர்களா ? யாரோ வருவதுபோலத் தூரத்தில் தெரிகிறது.

சோமு (ஜன்னலில் பார்த்து) : ஆமாம் — எனக்கும் தெரிகிறது.

வாசு : எனக்கு இருட்டிலே தெரியவில்லையே—சோமு, என் கண்ணுடிப் பெட்டி எங்கே ?

சோமு : வாசு, பேசாதே—அதோ இரண்டு பேர் பங்களா வுக்குள் வர முயல்கிருர்கள். வாசல் முன் கேட்டைத் திறக்கிருர்கள்.

இன்ஸ் (மெதுவாக) : ஆமாம், இப்பொழுது நன்ருகத் தெரிகிறது. ஒருத்தி பெண்.

சோமு : சரோஜினியும், ராகவனும்தான். அவர்கள் பெரிய ஹாலுக்குள்தான் போவார்கள்.

இன்ஸ் : ஒருவேளே நேராக இந்த அறைக்குள் வந்து விட்டால்...... ?

**சோமு :** *அப்படி வர முடியாது. இதன் ஒரு கதவை உள்ளே தாளிட்டிருக்கிறேன். மற்ற கதவின் வழியாக வர வேண்டுமானால் பெரிய ஹாலுக்குள் நுழைந்துதான் வரவேண்டும். அதற்குள் நுழைந்து பிறகு இதற்கு வரவேண்டிய அவசியமிருக்காது.*

**இன்ஸ் :** எதற்கும் இந்தக் கதவையும் உள்ளே தாளிட்டு விடலாம். அவர்கள் பேசுவது நமக்கு எப்படியும் நன்றாகக் கேட்கும்.

*[இன்ஸ்பெக்டர் தாளிடுகிறார். மூவரும் எச்சரிக்கையோடு உட்கார்ந்திருக்கின்றனர்.]*

வாசு (மெதுவாக): ஹாலைத் திறப்பதுபோல சத்தம் கேட்கிறது.

**சோமு :** உஸ்,......பேசாதே. இன்ஸ்பெக்டர் ஸார், இனி உங்களால்தான் காரியம் ஆகவேணும்.

*[மூவரும் காது கொடுத்துக் கேட்கிறார்கள்.]*

[ திரை ]

## காட்சி ஆறு

*[சோமசுந்தரத்தின் பங்களாவில் உள்ள பெரிய ஹால் மிகுந்த கலை உணர்ச்சியோடு அது அணி செய்யப்பட்டுள்ளது. பல ஓவியங்களும் சிற்பங்களும் காட்சியளிக்கின்றன. எல்லா மின்சார விளக்குகளும் போடப்படவில்லை யென்றாலும் போதுமான வெளிச்சம் இருக்கிறது. ராகவனும் சரோஜினியும் நாற்காலியருகில் நின்றுகொண்டிருக்கிறார்கள்.]*

ராகவன் : சரோஜினி, இந்த ஹால் மிக நன்ருக இருக்கிறதே ! சோமசுந்தரம் நல்ல கலா ரசிகன் போலிருக்கிறது. நல்ல முறையிலே பங்களாக் கட்டியிருக்கிருன்.

சரோஜினி : நான் முன்னமேயே உங்களுக்குச் சொல்லியிருக்கிறேனே—இது மிக நல்ல பங்களா—அவர் ரொம்ப ஆசையோடு இதைக் கட்டியிருக்கிருர்.

ராகவன் (சற்றுக் கடுமையாக): இதை நன்ருகக் கட்டித்தான் அவன் உன்னை மயக்கியிருக்கிருன்.

சரோஜினி : ராகவ், மறுபடியும் இப்படிச் சந்தேகப்பட்டுப் பேசாதீர்கள். அவர் என்னை மயக்கவோ, ஏமாற்றவோ நினைத்ததே இல்லை. அப்படிப்பட்ட குணம் அவருக்குக் கிடையாது.

ராகவன் : பின் எதற்காக அவன் இந்தப் பங்களாவை உனக்கு எழுதி வைத்தான் ?

சரோஜினி : நான் இன்றைக்கு இந்தப் பங்களாவை உங்களுக்கு எதற்காக எழுதிக் கொடுத்தனே அதே காரணத்தினுல்தான். அன்பு அளவு கடந்து விட்டால் எதை வேண்டுமானுலும் செய்யும்.

ராகவன் (ஏளனமான தொனியுடன்) : நீ எனக்கு உயில் தானே எழுதிக் கொடுத்திருக்கிருய் ?

சரோஜினி : ஆமாம், அதனுலென்ன ?

ராகவன் : உயில் என்ருல் உன்னுடைய வாழ்க்கைக்குப் பிறகுதான் இந்த பங்களா எனக்குச் சொந்தமாகும்.

சரோஜினி : எல்லாம் ஒன்றுதான். நான் உங்களுக்குச் சொந்தமான பிறகு எல்லாம் உங்களுடையது

தானே ? நாம் கலியாணம் செய்துகொண்ட பிறகு வேண்டுமானால் உங்களுக்கு உரிமையாகவே எழுதிக் கொடுத்துவிடுகிறேன்.

ராகவன் : நீ இப்படி ஒரு நிபந்தனையோடு காரியம் செய்கிறாய். ஆனால், அவன் ஒரு நிபந்தனையு மில்லாமல் இந்தப் பங்களாவை உனக்கு எழுதிக் கொடுத்திருக்கிறான். இதில் ஏதோ விஷயம் இருக்க வேணும்.

சரோஜினி : ஒரு விஷயமும் இல்லை. நான் சத்தியமாகச் சொல்லுகிறேன்.

ராகவன் (அழுத்தமாக) : நான் இதை நம்ப முடியாது. எந்தப் பயித்தியக்காரனும் இப்படிச் செய்ய மாட்டான். நீ கூடச் செய்யவில்லையே ?

சரோஜினி : எனக்குக்கூட முதலில் ஆச்சரியமாகத்தான் இருந்தது. நானும் நம்பவில்லை. பத்திரத்தைக் கையில் வாங்கிப் பார்த்த பிறகுதான் நம்பிக்கை ஏற் பட்டது. அப்பொழுதுதான் நான் அவரை ஓரளவு புரிந்துகொண்டேன்.

ராகவன் : அவனைக் கலியாணம் செய்துகொள்ள மறுத்து விட்டு அவனிடமிருந்தே எப்படி நீ இவ்வளவு பெரிய பங்களாவைச் சொந்தமாகப் பெற்றுக்கொள்ளச் சம்மதித்தாய் ?

சரோஜினி : நான் சம்மதிக்கவே இல்லை. ஆனால், அவர் வாழ்க்கையிலேயே வெறுப்படைந்து விட்டவர் போலக் காணப்பட்டார். இதையும் நான் அவர் விருப்பப்படி வாங்கிக்கொள்ள மறுத்து விட்டால்

மனமுடைந்து அவருக்குப் பயித்தியம் பிடித்து விடுமோ என்று பயந்தேன்.

ராகவன் : ஆஹா! நல்ல பயம்! என்ன இருந்தாலும் ஒருவருடைய சொத்தை இப்படி வாங்கிக் கொள்ளலாமா ?

சரோஜினி : நான் அவருடைய சொத்தை அனுபவிக்க நினைக்கவே இல்லை. அவரே உபயோகித்துக்கொண்டிருக்கவேண்டும் என்ற நிபந்தனையை அவர் ஏற்றுக் கொண்ட பிறகுதான் நான் பத்திரத்தை வாங்கிக் கொண்டேன். இன்று வரையிலும் இந்தப் பங்களாவுக்கு உரிமை கொண்டாட நான் எண்ணியதே கிடையாது. நீங்கள் கேட்ட பிறகுதான் உங்களுக்கு உயில்......

ராகவன் (கடுமையாக) : உயிலைப்பற்றி மறுபடியும் பேசாதே. சரோஜினி, உன் வார்த்தையிலே எனக்கு நம்பிக்கையேற்பட வேண்டுமானால் நீ இரண்டு காரியம் இப்பொழுதே செய்யவேணும்.

சரோஜினி : உங்களையே சதா நினைவில் வைத்துக்கொண்டிருக்கிறேனென்பதைக் காண்பிக்க என்ன வேண்டுமானாலும் செய்யத் தயார். ஆனால், இனிமேலும் என்னை ஏமாறும்படி நீங்கள் செய்யக்கூடாது.

ராகவன் : நீ ஒரு சின்னக் கடிதம் எழுதி என்னிடம் கொடுக்கவேண்டும்.

சரோஜினி : எதைப் பற்றிக் கடிதம் ?

ராகவன் : சோமசுந்தரம் போன் மூலம் உன்னை அன்வ பங்களாவுக்கு இன்று மாலையில் வரச் சொன்னதாகவும் அங்கே போய்விட்டு ஒரு மணியில் வந்து

விடுவதாகவும் உன் வீட்டிலே எனக்கு எழுதிவைத்ததுபோல ஒரு சின்னக் கடிதம் எழுதவேண்டும்.

சரோஜினி (சந்தேகத்துடன்): அப்படிக் கடிதம் எதற்கு?

ராகவன்: அது எனக்கு வேண்டும்—காரணம் கேட்கக் கூடாது.

சரோஜினி: சரி, பிறகு என்ன செய்யவேண்டும்?

ராகவன்: இதோ சோமசுந்தரத்தின் அங்கவஸ்திரம் இருக்கிறது. அதைக் கொண்டு உன் கைகளைப் பின்னால் கட்டிவைக்கிறேன். நீ கீழே தள்ளப் பட்டதுபோல், குப்புறக் கிடக்கவேண்டும்...பிறகு போலீசார் வரும்போது சோமசுந்தரம் பலவந்தம் செய்ததாக அவர்களிடம் சொல்லவேண்டும். அவ்வளவுதான்.

சரோஜினி (தயக்கமாக): அவர் மேலே அப்படி எப்படிச் சொல்லுவது — அதனால் நமக்கென்ன லாபம்? அவர்......

ராகவன் (கண்டிப்பாக): ஏன், உன் ஆசை நாயகனைக் காட்டிக் கொடுக்கப்படாதா?

சரோஜினி: இது பெரிய பாதகச் செயல். அவர் என் ஆசை நாயகனும் அல்ல. நீங்கள் விரும்புவது போலச் செய்தால் நாளைக்கு என் பெயர் ஊரெல்லாம் அடிபடும். அது உங்களுக்குச் சம்மதமா?

ராகவன்: என்னோடு சேர்ந்து வாழ ஆசையிருந்தால் நீ இதற்கு இணங்கவேண்டும்.

சரோஜினி (இரங்கிய குரலில்): ராகவன், கொஞ்சம் நிதானமாக யோசித்துப்பாருங்கள்... நாம் கலியாணம்

செய்துகொண்டு சந்தோஷமாக வாழவேண்டு மென்று அவர் இந்தப் பங்களாவையே நமக்கு எழுதிக் கொடுத்திருக்கிறார். அவருக்கு இப்படி ஒரு அவமானம் உண்டாக்கலாமா ?

ராகவன் (கண்டிப்பான குரலில்) : இந்தப் பேச்சுக் கெல்லாம் இப்போ நேரமில்லை. என் இஷ்டப்படி நடப்பாயா இல்லையா ?

சரோஜினி : ஒருவருக்குத் தீங்கு செய்து நாம் சந்தோஷ மாக வாழ முடியாது.

ராகவன் : அந்த வேதாந்தமெல்லாம் எனக்கு வேண்டாம். இதோ இந்தக் கடிதாசில் நான் சொல்லுவதை எழுது.

சரோஜினி : நான் உயிரோடு அவருக்குத் தீங்கு செய்ய மாட்டேன். வாசுதேவனுடைய பணத்தை இப்படிப் பெற்றுக் கொண்டதே எனக்குப் பிடிக்கவில்லை. சோமசுந்தரமோ ஒரு உத்தமர். என்மேலுள்ள அன்பினால் அவர் எதையும் எனக்காகத் தியாகம் பண்ணுவார். அவருக்கு அவமானமோ தீங்கோ ஏற்படுவதற்கு நான் கருவியானால் பிறகு என் வாழ்க் கையில் இன்பமிராது. நான் அவர் அன்பை மறுத்த காரணத்தால் அவர் அடைந்த துன்பமே போதும்.

ராகவன் (சற்று யோசனை செய்துகொண்டே) : சரோ ஜினி, நம்முடைய திட்டமெல்லாம் நிறைவேறப் போகிற சமயத்திலே நீ தயங்குகிறாய். அப்படியானால் நாம் சேர்ந்து வாழ முடியாது போலிருக்கிறது.

சரோஜினி : நாம் மணம் செய்துகொண்டு வாழ்வதற்கும் இதற்கும் என்ன சம்பந்தமிருக்கிறது ? பாங்கியி

லுள்ள என் பணத்தையெல்லாம் உங்களுக்குச் செக் எழுதிக் கொடுத்துவிட்டேன். இந்தப் பங்களாவும் உங்களுடையதுதான். இனி வேறென்ன வேண்டும்? பணம் இருக்கிறது; நல்ல மாளிகை இருக்கிறது. உங்களுக்குச் சேவை செய்ய என்றும் நான் காத்திருக்கிறேன்.

ராகவன்: சரி, உன்னை நான் கட்டி வைக்கவில்லை—நீ சோமசுந்தரத்தின்மேல் எவ்விதப் பழியும் சுமத்த வேண்டாம். நான் கேட்ட அந்தக் கடிதத்தை மட்டும் எழுதிக் கொடு.

சரோஜினி: அந்தக் கடிதமும் அவசியமில்லையே, ராகவ்?

ராகவன் (கண்டிப்பாக): இல்லை, அது எனக்கு அவசியம் வேண்டும்.

சரோஜினி: அவர்மேல் குற்றம் சுமத்த நினைத்தால்தான் அந்தக் கடிதம் வேண்டும். இல்லாவிட்டால் அது எதற்கு?

ராகவன்: சரோஜினி, இப்படியெல்லாம் நீ கேட்கக் கூடாது. நான் சொன்ன இரண்டு நிபந்தனைகளில் ஒன்றை உன் விருப்பப்படி விட்டுக் கொடுத்து விட்டேன். இந்த ஒரு நிபந்தனையை மட்டும் என் விருப்பப்படி நீ செய்யவேண்டும்.

சரோஜினி: இந்த நிபந்தனையை நான் நிறைவேற்றி விட்டால் மற்றொரு நிபந்தனையையும் நீங்களே நிறைவேற்றிக் கொள்ள முடியும்.

ராகவன் (சற்று திகைத்து): நீ சொல்லுவது எனக்கு விளங்கவில்லையே?

சரோஜினி : விளங்காமலென்ன ? எல்லாம் விளங்கி யிருக்கும். கடிதம் கிடைத்துவிட்டால் பிறகு என்னை என்ன வேண்டுமானாலும் செய்ய முடியாதா ?

ராகவன் : சரோஜினி, இப்படிப் புதிர் போட்டுப் பேசிக் கொண்டிருக்காதே. நாம் விமான நிலையத்திற்குப் புறப்படுவதற்கு முன்னே கவனிக்க வேண்டிய காரியம் நிறைய இருக்கிறது.

சரோஜினி : இப்பொழுதே போய் அவற்றைக் கவனிப் போம். இங்கே நமக்கு வேலையே இல்லை.

ராகவன் (பொறுமை யிழந்து) : நீ முதலில் கடிதத்தை எழுது...இந்தா பேனா.

[பேனாவை எடுத்துக் கொடுக்கிறான்.]

சரோஜினி (பேனாவை வாங்காமல்) : எனக்கு உங்க ளுடைய சூழ்ச்சி ஒருவாறு விளங்குகிறது. எனக்கு என்ன நேர்ந்தாலும் சரி ; நான் உயிரோடு சோம சுந்தரத்திற்குத் தீங்கு நேரச் சம்மதிக்கமாட்டேன்.

ராகவன் (கோபத்தோடு) : உயிரோடு சம்மதிக்க மாட்டாயா ? அப்போ நீ பிணமாக வேண்டியது தான். இதோ என் கையிலே என்ன பார்த்தாயா ?

[கைத் துப்பாக்கியை எடுத்து நீட்டுகிறான்.]

சரோஜினி : ஐயையோ—இது உங்களிடமா இருக்கிறது ? மாலதியிடம் இந்தத் துப்பாக்கியைக் கொடுத்து விட்டதாகச் சொன்னீர்களே ?

ராகவன் : மாலதியிடம் கொடுத்தது வெறும் பொம்மைத் துப்பாக்கி — இதுதான் வாசுதேவன் துப்பாக்கி.

சரோஜினி : உங்களுடைய வஞ்சனையெல்லாம் இப் பொழுதுதான் எனக்குத் தெளிவாகத் தெரிகிறது.

நீங்கள் அவர்கள் இரண்டு பேரையும் ஒரே சமயத்தில் குற்றவாளியாக்கச் சூழ்ச்சிச் செய்கிறீர்கள்.

ராகவன் : ஆமாம், உன்னோடு சகவாசம் வைத்திருந்த அவர்களுக்கு நல்ல பாடம் கற்பிக்கப் போகிறேன்.

சரோஜினி : அவர்கள் எவ்விதமான குற்றமும் செய்ய வில்லை என்பது உங்களுக்குத் தெரியும். இப்படிச் சொல்லி அவர்கள் சொத்தைப் பறிப்பதோடு என்னையும் ஏமாற்றப் பார்க்கிறீர்கள். என்மீது உங்களுக்கு அன்பே கிடையாதென்று இப்பொழுது எனக்குத் தெரிகிறது.

ராகவன் : அதிகமாகப் பேசாதே—நீ சத்தம் போடுவ தால் இங்கே யாரும் வரப் போவதில்லை.

சரோஜினி : பக்கத்தில் வீடே இல்லையென்றுதான் என்னைப் பயமுறுத்த இங்கு அழைத்து வந்தீர்களா ? அந்த உத்தமருடைய அன்பை உதறித் தள்ளிவிட்டு உன்னையே எண்ணிக் கிடந்த எனக்கு இது நன்றாக வேணும்.

ராகவன் : சரோஜினி—இந்தா பேனாவைப் பிடி......நான் சொல்லுகிறபடி எழுது—இல்லாவிட்டால்...

[பேனாவைக் கொடுக்க அருகில் வருகிறான்.]

சரோஜினி (உறுதியோடு) : அது முடியாது...

ராகவன் : முடியாதா ?...என்ன சொன்னாய் ?

[கன்னத்தில் அடிக்கிறான்.]

சரோஜினி : ஹா·····(தேம்புகிறாள்) ......இதற்கெல்லாம் நான் பயப்படமாட்டேன்.

ராகவன் : என்னிஷ்டப்படி நீ செய்தாக வேண்டும். இல்லாவிட்டால் உன்னுடைய ஆசை நிறைவேருது—என்னேடு வாழ முடியாது.

சரோஜினி : உங்களோடு வாழ முடியாதென்று உங்கள் நிபந்தனையைக் கேட்டபொழுதே தெரிந்துவிட்டது' நீங்கள் என்னைப் பயன்படுத்தி சோமசுந்தரத்திடமும் பணம் பறிக்க உத்தேசித்திருக்கிறீர்கள். நான் இந்தப் பங்களாவை உங்களுக்கு உயில் எழுதி வைத்ததே தப்பு.

ராகவன் : அப்படி எழுதிக் கொடுக்காவிட்டால் உன்னை என் மனைவியாக ஏற்றுக் கொள்ளுவேனென்று நினைத்தாயா ?

சரோஜினி : நான் உங்களுக்கு மனைவியே அல்ல. நீங்கள் அப்படி மனைவியாக ஏற்றுக்கொள்ள மாட்டீர்கள் என்பதும் இப்பொழுது தெரிந்துவிட்டது.

ராகவன் : ஓகோ! இப்போ தெரிகிறதா உனக்கு? எதற்காக இதுவரையில் நீ என் மனைவி என்று சொல்லிக்கொண்டு ஊரை ஏமாற்றி வந்தாய் ?

சரோஜினி : நான் ஏமாற்றியதிருக்கட்டும் — நீங்கள் இன்னமும் ஊரை ஏமாற்ற நான் சம்மதிக்க மாட்டேன்.

[சரோஜினி சாமர்த்தியமாக நாற்காலி ஒன்றை ராகவன்மீது தள்ளிவிடுகிருள். பிறகு வெளியே ஓட முயற்சி செய்கிருள்.]

ராகவன் : இப்படி நாற்காலியைத் தட்டிவிட்டு ஓடித் தப்பவா பார்க்கிருய்—அதெல்லாம் இனி நடவாது.

[அவன் முதலில் தடுமாறினாலும் சமாளித்துக் கொண்டு எழுந்து அவளைப் பிடிக்க ஓடுகிறான். சரோஜினி மற்றொரு நாற்காலியை எடுத்து ஓங்குகிறாள்.]

சரோஜினி—அதை எடுத்து வீசினால் உன்னைக் கட்டாயம் சுடுவேன்.

**சரோஜினி :** சுடுங்கள் — அந்த எண்ணத்தோடுதானே இங்கே வந்திருக்கிறீர் ?

**ராகவன் :** • நான் சுட்டால் அந்த சோமசுந்தரம் தப்ப மாட்டான்—அவன்மேல்தான் குற்றம் சேரும்.

[சரோஜினி நாற்காலியை எறிந்துவிட்டுச் சட்டென்று மேஜைமீதிருந்த பூக்குவளையை எடுத்து ராகவன் தலையை நோக்கி வீசுகிறாள். ராகவன் சமாளித்து விலகிக்கொண்டு துப்பாக்கியால் சுடுகிறான்.]

**சரோஜினி :** ஹா...வஞ்சகா...ஐயோ...கொலை...கொலை.

[கீழே சாய்கிறாள். ஆனால் அவளுக்குக் காயமில்லை. இன்ஸ்பெக்டரும் மற்றவர்களும் வருகிறார்கள்.]

**இன்ஸ்** (அதிகாரக் குரலில்) : ராகவா ...... அப்படியே நில்—அசையாதே—கையை மேலே தூக்கு—இல்லாவிட்டால் உன்னைச் சுடுவேன்.

[துப்பாக்கியை நீட்டுகிறார்.]

**சோமு :** வாசு, என் திட்டம் பலித்துவிட்டது. இன்ஸ்பெக்டர் ஸார், உங்களுக்கு எனது நன்றி.

**வாசு :** எனக்கு இன்னும் ஒன்றும் விளங்கவே இல்லையடா. ராகவன் எதற்காக இங்கு வந்தான் ? மாலதி கொடுத்த பணத்தை எடுத்துக்கொண்டு அப்படியே ஓடித் தொலைகிறதுதானே ?

*[ராகவன் கையை மேலே தூக்கிக்கொண்டு நிற்கிருன். இன்ஸ்பெக்டர் அவனுடைய துப்பாக்கியை எடுத்துக்கொண்டு அவனுக்கு விலங்கு மாட்டுகிருர்.]*

சோமு : பணத்தோடு போயிருந்தால் பங்களா கிடைக்குமா ?

வாசு : பங்களாவைத்தான் சரோஜினி உயில் எழுதிக் கொடுத்து விட்டாளே ?

சோமு : டேய், இன்னும் இப்படி அபத்தமாகப் பேசிக் கொண்டிருக்காதே. சரோஜினியைத் தீர்த்துக் கட்டிவிட்டுக் கொலைக் குற்றத்தை என்மீது சுமத்தி விட்டால் பிறகு அவன் நிம்மதியாகப் பங்களாவை அனுபவித்துக்கொண்டிருக்க முடியும்.

ராகவன் : வாசுதேவன் ஆழ்ந்து சிந்திக்கிறவர் அல்ல. அவருக்கு அதெல்லாம் விளங்காது.

இன்ஸ் : சோமசுந்தரத்தையும் அப்படி நினைத்துத்தான் நீ ஏமாந்துவிட்டாய். நட, போகலாம். நீ ஒரு பயங்கரமான குற்றவாளி. இப்படித் திட்டம் போட்டுக் குற்றஞ் செய்கிற உனக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் போதாது.

*[ராகவனும், இன்ஸ்பெக்டரும் போகிருர்கள். சரோஜினியும், வாசுதேவனும் சோமசுந்தரத்தை மகிழ்ச்சியோடு பார்த்து நிற்கிருர்கள்.]*

—திரை—

## நாடகத்தில் தோன்றுவோர்

லலிதா

பானுமதி

சதாசிவம்

தாமோதரன்

சரோஜா

போலீஸ் இன்ஸ்பெக்டர்

# காதல் எங்கே?

## முதல் அங்கம்

### காட்சி ஒன்று

*[லலிதாவின் மாளிகையில் நாகரிகமாக அலங்கரிக்கப் பட்ட ஓர் அறை. லலிதா தனியாக அமர்ந்து மெல்லிசை மெட்டிலே ஒரு பாட்டைப் பாடிக் கொண்டிருக்கிருள். நவநாகரிக மங்கை அவள்; வயது 22—க்கு மேல் இராது. ஆனுல், தோற் றத்தில் சிறுமி போலவே காணப்படுகிருள். மாலை நேரம்.]*

லலிதா *(பாட்டு)* :

பல்லவி

ஆசையெல்லாம் அறியாயோ—என் றன்
அன்பை யுணர்ந்து நீ செயல் புரியாயோ (ஆசை)

அனுபல்லவி

ஆசையினுல் உள்ளம் வெம்பித் துடித்துளேன்
அல்லும் பகலும்நான் வாடியே நைந்துளேன் (ஆசை)

சரணம்

காதலின் இன்பத்தைக் கனவிலே காண்பதோ
கனிந்திடும் பழமதை மூடியே வைப்பதோ
பேதமையால் வந்த நடைமுறை தன்னிலே
பிஞ்சுளம் மயங்கியே தேய்ந்திடலாகுமோ (ஆசை)

*[அவள் பாடி முடிக்கும்போது பானுமதி உள்ளே நுழைகிருள். ஒத்த வயதுள்ள அவள் லலிதாவின் தோழி.]*

லலிதா *(ஆச்சரியத்தோடு)* : *யார் பானுமதியா ? வா வா...வா...கல்கத்தாவிலிருந்து எப்போ வந்தாய் ? உன்னைப் பார்த்து ரொம்ப வருஷம் ஆச்சு......*

பானுமதி : *ஆமாம் லலிதா—உன் கலியாணத்தின்போது பார்த்ததுதான்—அதற்கப்புறம் நாம் சந்திக்கவே இல்லை.*

லலிதா . *கலியாணத்தின் போதா? ஆமாம்...நீ சொல்லுவது சரிதான்—நாலு வருஷமாய்விட்டது.*

பானுமதி : *அவருக்கு மத்திய அரசாங்க வேலையல்லவா ? திடீரென்று கல்கத்தாவுக்கு மாற்றல் ஏற்பட்டது. அதனுலே உடனே புறப்பட வேண்டியிருந்தது. உன் கலியாணத்துக்காகத்தான் இரண்டுநாள் அதிகமாக இங்கேயே நாங்கள் தங்கியிருந்துவிட்டுச் சென்ருேம்.*

லலிதா : *ஆமாம் பானுமதி—அதெல்லாம் எனக்கு இப்பொழுதுதான் ஞாபகத்துக்கு வருகிறது. ம்... அதெல்லாம் அந்தக் காலம்—கல்லூரியிலே படிக்கிற போது நாம் இரண்டுபேரும் எவ்வளவு உயிருக்குயிராக இருந்தோம்.*

பானுமதி : *இப்போ மாத்திரம் என்ன? நேரிலே சந்திக்காவிட்டாலும் நம் அன்பு குறைந்து போய்விட்டதா*

என்ன ? தூரப் போகப் போகத்தான் அன்பு அதிக மாகிறது.

லலிதா : அதில்லே பானுமதி...அன்பு குறையாமல் போனாலும் நீ பக்கத்திலே இருந்திருந்தால் எனக்கு எத்தனையோ ஆறுதலாக இருக்கும். இப்பொழுது என் மனத்தைத் திறந்து சொல்ல இங்கே எனக்கு யாருமே இல்லே.

பானுமதி : லலிதா, நீ கடிதத்திலே எழுதுகிற விஷயம் எனக்குப் புரியவே இல்லே. அண்ணா என்ன அப்படி உதாசீனமாக இருக்கிறாரா என்ன ?

லலிதா : அப்படிச் சொல்லவும் முடியவில்லே. இருந் தாலும்...எனக்கென்னவோ...

பானுமதி : இருந்தாலும்...உனக்கென்னவாமா ? இப்படி ஒருவர் வாய்க்கவேணுமே ? பாங்கியிலே நிறைய சம்பாதிக்கிறார்...கண்ணுக்கு லட்சணமான...

லலிதா : பானுமதி, நீ என் உள்ளத்தைச் சரியானபடி புரிந்து கொள்ளவில்லே. அதுதான் இப்படிப் பேசுகிறாய்.

பானுமதி : அதுதான் நான் முன்னமேயே சொன்னேனே —உன்னுடைய கடிதங்கள் எனக்கு அர்த்தமாகவே இல்லே. என்னமோ வளைத்து வளைத்து எழுதுகிறாய். கடைசியிலே பார்த்தால் ஒண்ணையும் காணோம்.

லலிதா : உன் சிநேகிதி யிடத்திலே அவ்வளவுதான் உனக்கு அன்பு—இல்லாவிட்டால் என் கடிதம் உனக்கு விளங்காமல் போகாது...

[பெருமூச்சு விடுகிறாள்.]

பானுமதி : விளங்குவதற்கு அதிலே என்ன இருக்கிறது? இங்கிலீஷ் நாவலிலே படித்தவிஷயமும், சினிமாவிலே பார்த்ததுந்தான் இருக்கிறது. வேறொன்றும் இல்லை.

லலிதா : நீ இப்படிப் பேசுவாயென்று நான் நினைக்கவே இல்லை. நாம் படித்த விஷயங்களிலே தப்பென்ன இருக்கிறது? மேல் நாட்டு சமூக நடைமுறை தப்பாக இருந்தால் அந்தக் கதைகளையெல்லாம் இன்றைக்கும் நமக்குக் கல்லூரிகளிலே படிக்கும்படி பாடமாக வைப்பார்களா ? எனக்கென்னவோ மேல்நாட்டுப் பழக்க வழக்கங்கள்தான் ரொம்பவும் பிடிக்கிறது.

பானுமதி : மேல்நாட்டுச் சமூக நடைமுறையிலும் நல்ல அம்சங்கள் இல்லாமலில்லை. ஆனல், அடிப்படையான நோக்கங்களிலே நமக்கும் அவர்களுக்கும் எத்தனையோ மாறுபாடுகள் உண்டு. நமது பண்பாட்டிற்கு அவை சரிப்படுமா ?

லலிதா : அப்போ அவற்றைப்பற்றி நாம் ஏன் இன்றைக்கும் படிக்க வேண்டும் ? தேசம் விடுதலையடைந்த பிறகும் அவற்றையே படிப்பானேன் ? அந்தக் கதை எல்லாம் எதற்கு ?

பானுமதி : ஆங்கிலம் படிப்பதனல் நமக்கு எத்தனையோ நன்மை உண்டு. ஆங்கிலத்தின் மூலமாகத்தானே நமக்கு விஞ்ஞான அறிவெல்லாம் கிடைக்கிறது ? அது வேண்டாமா ?

லலிதா : பானுமதி, நீ சொல்லுவது எனக்குப் புதிராக இருக்கிறது. விஞ்ஞான அறிவெல்லாம் வேண்டுமானல் விஞ்ஞானத்தை மட்டும் படிக்கிறதுதானே ? ஹார்டி நாவல் எதற்கு ?

பானுமதி : லலிதா...உன்னோடு தர்க்கம் செய்யறதுக்காக நான் வரவில்லே. உனக்குத் தகவல் கொடுக்காமல் திடீரென்று வந்து பார்க்க வேணுமென்றுதான் வந்தேன். அதனால்தான் உனக்குக் கடிதங்கூட போடவில்லே.

லலிதா : பானு, நான் என்னவோ என் மனப் போராட்டத்தையே நினைத்துப் பேசிக் கொண்டிருந்து விட்டேன். என்னை மன்னித்துவிடு. நாலு வருஷம் கழித்து வந்த உனக்குக் காப்பிகூடக் கொடுக்காமல் பேசிக்கொண்டிருக்கிறேன்.

பானுமதி : காப்பிக்கு இப்போ என்ன அவசரம் ? அண்ணா எப்போ வருவார் ?

லலிதா : பாங்க் 5 மணிக்கே மூடியாகிவிடும். ஆனால், இவர் வேலேயெல்லாம் முடித்துவிட்டு ஆறுமணிக்கோ ஏழு மணிக்கோதான் அங்கிருந்து புறப்படுவார்.

பானுமதி : ஆமாம், பாங்க் மானேஜர் என்றால் பொறுப்பு அதிகமாக இருக்கும். அதிலும் இவர் தமது கடமையைச் செய்வதிலே ரொம்பவும் கண்ணுங் கருத்துமாக இருப்பார். இதெல்லாம் எனக்கு முன்னமேயே தெரியும். இப்போ சம்பளம் எவ்வளவு ?

லலிதா : ஆயிரம் ரூபாய் வருகிறது. ஆனால்...சம்பளம் இருந்து என்ன செய்கிறது ?

[மீண்டும் பெருமூச்சு விடுகிறாள்.]

பானுமதி : இவரைப் போல நல்லவர் கிடைக்க வேணுமே —லலிதா நீ உண்மையிலேயே நல்ல பாக்கியம் செய்தவள். அதை உணராமல் என்னமோ குழப்பிக் கொண்டிருக்கவேண்டாம்.

லலிதா : நீ இன்றைக்கு இங்கேயே இருந்துவிடு பானு—நீ இருந்தால் எப்படியாவது அவரை சினிமாவுக்கு வரும்படி செய்துவிடலாம். நான் கூப்பிட்டால் அவர் வருகிறதே இல்லை. சினிமா என்றால் அவருக்கு ஆகவே ஆகாது. என்னைத் தனியாகத்தான் போகச் சொல்லுவார்.

பானுமதி : சரி லலிதா—நான் வீட்டுக்குப் போய் அம்மாவிடம் சொல்லிவிட்டு வந்துவிடுகிறேன். இல்லாவிட்டால் அம்மா எனக்காக அனாவசியமாகக் காத்துக் கொண்டிருப்பார்கள்.

லலிதா : கட்டாயமாக வந்துவிடு ; ஏமாற்றிவிடாதே.

பானுமதி : இல்லை நிச்சயம் வந்துவிடுகிறேன். அண்ணாவையும் வந்து பார்த்துக் கொள்ளுகிறேன்.

*[அவசரமாகப் புறப்படுகிறாள்.]*

## காட்சி இரண்டு

*[சதாசிவம், லலிதா, பானுமதி கடற்கரை மணலில் தனியிடத்திலே அமர்ந்திருக்கிறார்கள். சதாசிவத்திற்கு முப்பது வயதிருக்கலாம். ஆழ்ந்த மதிநுட்பமும், கடமையுணர்ச்சியும், தெளிந்த எண்ணங்களும் உடையவனாக அவன் தோன்றுகிறான். இரவு சுமார் எட்டு மணி. நிலவு காய்ந்து கொண்டிருக்கிறது. தொலைவிலே அலையெழுந்து வீசும் அரவம்.]*

சதாசிவம் : பானுமதி, நான் சினிமாவுக்கே போகாமலிருப்பதற்கு இப்பொழுது காரணம் தெரிந்ததல்லவா ?

லலிதா (சட்டென்று) : பானு, நீ பதில் சொல்லாதே. நான் அவருக்குப் பதில் சொல்லுகிறேன்.

சதாசிவம் : ஆமாம் பானு, அவளே சொல்லட்டும். அப்பொழுதுதான் அவளுடைய உள்ளக் கருத்தை நீ தெரிந்து கொள்ளமுடியும்.

லலிதா : அதற்காக நான் பேச வரவில்லை. பானு நீங்கள் சொல்வதையே சரியென்பாள். அவளும் நீங்களும் ஒன்றுதானே ?

பானுமதி : அதிலென்ன சந்தேகம் லலிதா ? அதனுல் தான் நான் அவரை என் அண்ணனுகவே பாவித்திருக்கிறேன்.

லலிதா : சரி, நீயும் உன் அண்ணனேடு சேர்ந்து கொண்டே பேசு பார்க்கலாம். இப்போ நாம் பார்த்த படத்திலே என்ன தப்புக் கண்டீர்கள் ?

சதாசிவம் : என்ன தப்பா ? எத்தனையோ சொல்லலாம். முக்கியமாக அந்தக் காதலனும் காதலியும் காட்சியளித்தார்களே—சுத்தப் பயித்தியங்களாக இல்லையா ?

லலிதா : அவர்கள் தனியே சந்தித்துக் காதல் செய்து கொண்டிருந்தார்கள்—அதிலே என்ன தப்பு? அது காதல் காட்சி.

சதாசிவம் : தப்பில்லை, லலிதா-காதல் ரொம்ப உயர்ந்த விஷயம்...அதை அப்படிக் கேலிக் கூத்தாகப் பண்ணக் கூடாது என்றுதான் சொல்லுகிறேன்.

பானுமதி : லலிதா, நீ அந்தக் காதலியை நினைத்துப் பார் -அவள் ஆடரதும், மரத்தின்மேலே சாயரதும், பிறகு ஓடரதும்-குழந்தைகள் தும்பி பறப்பதைப் போலச் சுற்றுவதும்...

சதாசிவம் : சுத்தப் பயித்தியம் மாதிரி இருக்கவில்லையா? நம்ம நாட்டிலே பூங்காவனத்திலே இப்படித்தான் காதலிகளெல்லாம் ஆடிக்கொண்டு திரிகிறார்களா? அந்தக் காதலனைத்தான் பார்—என்னமோ வெறி பிடித்தவன்போலப் பின்னாலேயே ஓடுகிறான்— நிற்கிறான்—பிறகு அவனும் ஆட ஆரம்பித்துவிட்டான்- ஓடுவதும் அவளைக் கட்டிப் பிடிப்பதுபோலத் தாவுவதும்—அவள் ஓடுவதும்—கிட்டே நெருங்குவதும்.

[உரக்கச் சிரிக்கிறார்கள்,]

லலிதா : நீங்கள் காதல் பண்ணிப் பார்த்திருந்தால் இதெல்லாம் புதுமையாகத் தோணாது.

சதாசிவம் : நானா? நல்லவேளை—இப்படிப் பயித்தியம் எனக்குப் பிடிக்காமல் தப்பித்தேன். ஆனால் நம்ம சமூகத்திலே எங்கேயாவது இப்படி நடப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

லலிதா : நடக்காவிட்டாலென்ன? இப்படிக் காதல் பண்ணிக் கலியாணம் செய்துகொள்ள வேணுமென்று தான் கற்பனை செய்கிறார்கள்.

சதாசிவம் : பானுமதி, நீ சொல்லு. இப்படிக் காதல் பண்ணுவதெல்லாம் உனக்குச் சம்மதமா? அவள் பூவைப் பிடிக்கிறதும்—பாடுறதும்—மார்பை நிமிர்த்திக் காட்டுவதும்—இரண்டு பேரும் முகத்தை ஆயிரம் கோணல் செய்வதும்—நம்ம பூங்காவிலே இப்படி நடந்தால் சுற்றிலும் ஒரு கூட்டமே கூடி வேடிக்கை பார்க்கமாட்டார்களா? கல்லடிகூட விழாமல் போகாது.

லலிதா : நீங்கள் இப்படி மற்றவர்களிடம் பேசிவிடாதீர்கள். பிறகு உங்களுக்குத்தான் கல்லடி விழும்.

உங்கள் நண்பர்களெல்லாம் உங்களைக் கேலி செய்வார்கள்.

சதாசிவம் : மற்றவர்களைப்பற்றி நீ கவலைப்படாதே. உனக்கே அப்படித் தோன்றுகிறதோ?

பானுமதி : அண்ணு, இப்படி நீங்கள் கேட்பது நியாயமில்லை.

சதாசிவம் : சரி பானு, அந்தப் பாலத்தின்மேல் நடந்த காட்சியைப் பார்த்தாயா? காதலர்கள் வந்தால் எப்படியாவது அந்த இடத்தில் இந்தப் பாலம் வந்து விடுகிறது. பாலமே இல்லாமல் காதலே செய்ய முடியாதா?

பானுமதி (சிரித்துக்கொண்டே) : இரண்டு கரைகளையும் அதுதானே ஒன்ருகச் சேர்க்கிறது?

சதாசிவம் : அந்தக் காதலனை நினைத்தால் சிரிப்புத்தான் வருகிறது — கிட்டக் கிட்டப் போகிருன் — முத்தங் கொடுக்கிற மாதிரி என்னேன்னவோ பாவனை பண்ணுகிருன்—ஆனுல் வெளிப்படையாக முத்தங் கொடுக்கத்தான் முடிகிறதில்லை—அதையும் பண்ணி விடுவான்—சென்சார் போர்டிலே வெட்டி விடுவார்கள் என்றுதான் பயம்...

லலிதா : முத்தங் கொடுத்தால் என்ன தப்பு?

சதாசிவம் : தப்பா? தப்புங்கிறது ஒன்றுமே இல்லை. நம்ம சமூகத்திலே இப்படிப் பொது இடத்திலே யாரும் நடந்து கொள்ளமாட்டார்கள். அதுதான் விஷயம். மேல்நாட்டுச் சமூகத்திலே அது வேறு விஷயம்.

லலிதா : அதுதான் படம் பாதிகூட ஆகாமல் எழுந்து வந்துவிட்டோமே. கடற்கரையிலே உட்கார்ந்து

கொண்டு இப்படிப் பேசுவதைவிடப் பேசாமல் வீட்டுக்காவது போகலாம்.

சதாசிவம் : எனக்கும் சம்மதம்தான். கடற்கரையின் சுகங்கூட அந்தப் படத்தால் கெட்டுவிட்டது. பானுமதி, கல்கத்தாவிலே இப்படிப் படமெல்லாம் பார்த்திருக்கமாட்டாய்.

பானுமதி : அண்ணு, கல்கத்தா மட்டும் வேறையா? அங்கும் இதே லட்சணந்தான். இப்போ படித்த பெண்களெல்லாம் இந்தப் படங்களிலிருந்துதான் நடத்தையெல்லாம் கற்றுக்கொள்கிறுர்கள்.

சதாசிவம் : எல்லோரையும் சேர்த்து அப்படிச் சொல்லாதே. இன்னும் நம்முடைய சமூகம் அந்த நிலைமைக்கு வரவில்லை.

லலிதா : காதல் செய்து கலியாணம் நடக்காவிட்டால் நம்ம வாழ்க்கை சந்தோஷமாக அமையாது. அதை நீங்கள் மறுக்க முடியாது.

பானுமதி : லலிதா, வீட்டுக்குப் போய் இந்தப் பிரச்சினையைப்பற்றி விவாதிக்கலாம். இங்கே எதுக்கு?

லலிதா : சரி பானு, இப்பொழுதே புறப்படுவோம். இவர் கூட வந்தால் சினிமாவை ரசிக்கவே முடிவதில்லை. எல்லாவற்றையும் குற்றஞ் சொல்லிக்கொண்டே இருப்பார்.

சதாசிவம் : என்ன லலிதா, எழுந்துவிட்டாயே? அந்தக் காதல் பாட்டைக் கேட்டாயல்லவா? காதலி அந்தக் காகிதப் பூக்களைக் கட்டிப் பிடித்துக்கொண்டு கொஞ்ச ஆரம்பித்துவிட்டால் காதலன் பாடித்தான்

ஆக வேண்டும். பிறகு அவளும் பாடத் தொடங்கு வாள்.

லலிதா : அது உங்களுக்கு எப்படித் தெரியும்?

சதாசிவம் : அதுதானே வழக்கம்? நான் வண்டு நீ செண்டு —என்று இப்படிக் காதலியும் காதலனும் மாறி மாறி உயிரை வாங்குவார்கள். பாட்டும் ஓட்டமும் ஆட்டமுமாக அமர்க்களமாக இருக்கும்.

லலிதா: (சற்றுக் கோபத்தோடு): சரி வாருங்கள். வீட்டுக் குப் போகலாம். பானு, பார்த்தாயா உன் அண்ணனை? இதைத்தான் உனக்கு எழுதினேன்.

பானுமதி : அண்ணன் சொன்னது சரிதானே?

சதாசிவம் : நாளைக்கு அமைதியாக மறுபடியும் பேசு வோம்; இப்போ புறப்படுவோம்.

[போகிறார்கள்.]

## காட்சி மூன்று

[லலிதாவின் மாளிகை. காலை பதினொரு மணி. லலிதா ஏதோ ஒரு பாடல் வரியைப் பாடிக் கொண்டிருக்கிறாள். யாரோ கூடத்தில் நிற்பதை அறிந்து சட்டென்று பாட்டை நிறுத்திப் பேசு கிறாள். தாமோதரன் அங்கு வந்து நிற்கிறான். அவனுக்கு முப்பது வயதிருக்கலாம்.]

லலிதா : யாரங்கே?

தாமோதரன் : மிஸ்டர் சதாசிவம் இருக்கிறாரா? அவரைப் பார்த்து ஒரு விஷயம் கேட்க வந்தேன்.

லலிதா : *அவர் பாங்குக்குப் போய்விட்டாரே? நீங்கள் யார்?*

தாமோ : *நான் ஒரு ஓவியன்.*

லலிதா : *ஓவியரா, இவர் ஏதாவது படம் எழுதும்படியாக...?*

தாமோ : *இல்லை—நான் ஓவியன் என்ற முறையிலே அவரைப் பார்க்க வரவில்லை. கலாரசனைச் சங்கம் என்று நான் ஒரு சங்கம் ஏற்படுத்தி அதற்குக் காரிய தரிசியாக இருக்கிறேன். அது சம்பந்தமாக அவரைப் பார்க்க வந்தேன்.*

லலிதா : *காலையிலே ஒன்பது மணிக்கு முன்னால் வந்தால் அவரைப் பார்க்கலாம். ஆனால் அவர் பிரசங்கம் செய்யவெல்லாம் போகிற பழக்கம் இல்லையே?*

தாமோ : *எங்கள் சங்கத்திலே கலை சம்பந்தமான விவாதங்கள்தான் முக்கியமாக ஏற்பாடு செய்கிறோம்...இவருக்கு சினிமாவைப்பற்றி முக்கியமான சில கருத்துக்கள் உண்டு என்று தெரிந்தேன். அதனாலே அதைப்பற்றிச் சொல்லும்படி கேட்டுக் கொள்ள வேணுமென்று எனக்கு ஆசை.*

லலிதா : *அது உங்களுக்கு எப்படித் தெரியும்?*

தாமோ : *நான் சொல்லுவதற்காக மன்னிக்கவேணும். அன்றைக்குக் கடற்கரையிலே நீங்கள் பேசிக்கொண்டிருந்த விஷயம் என் காதிலே விழுந்தது.*

லலிதா : *அப்படியா? உங்களுக்கும் அவருடைய கொள்கை தானா?*

தாமோ : *அவருடைய கருத்துக்கு நேர்மாறானகருத்து எனக்கு. அதனால்தான் எங்களுடைய கலாரசனைச்*

சங்கத்திலே அவரோடு நான் விவாதம் பண்ணலா மென்று ஆசைப்படுகிறேன்.

லலிதா : ரொம்ப நல்லது. ஆனால்...எங்கள் வீடு உங்க ளுக்கு எப்படித் தெரிந்தது?

தாமோ : இவர் மானேஜராக இருக்கும் பாங்கில்தான் நான் வரவு செலவு வைத்துக் கொண்டிருக்கிறேன். தற்செயலாகப் பலமுறை அவரை நான் அங்கு பார்த்திருக்கிறேன். பாங்கிலிருந்துதான் விலாசம் தெரிந்துகொண்டேன்.

லலிதா : அப்படியா? சரி—அப்போ நாளைக்குக் காலை யிலே வாருங்கள். நானும் சொல்லி வைக்கிறேன்.

தாமோ : அவரை இன்றைக்குப் பார்க்க முடியா விட்டாலும் உங்களுடைய அற்புதமான பாடலைக் கேட்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அதைப் பற்றிச் சொல்லாமலிருக்க முடியவில்லை.

லலிதா (மகிழ்ச்சியோடு) : நான் என்ன அப்படி நன்றாகப் பாடுகிறேனா என்ன?

தாமோ : உங்களுடைய பாட்டின் இனிமையை அறி யாதவனுக்குக் காதே இல்லையென்றுதான் சொல்ல வேணும்...நான் முன்பின் தெரியாமல் இப்படியெல் லாம் பேசுவதைப்பற்றி நீங்கள் தவறாக நினைக்கக் கூடாது. நான் ஓவியன், கலைஞன், கலையின் இனி மையை அனுபவிக்கின்றபோது அதைப்பற்றிப் பேசாமல் என்னால் இருக்க முடியாது.

லலிதா : நீங்கள் சொன்னதைப்பற்றி எனக்குக் கோப மில்லை...அப்போ நீங்கள் நாளைக்குக் கட்டாயமாக வாருங்கள்.

தாமோ : அவசியம் வருகிறேன். நீங்கள்கூட எங்கள் சங்கத்திற்கு வந்தால் எங்களுக்கு மிகுந்த சந்தோஷமாக இருக்கும். உங்களைப் போலப் படித்தவர்களெல்லாம் சங்கத்தில் கலந்து கொள்ளவேணும் என்பது என்னுடைய ஆசை.

லலிதா : அதெல்லாம் பின்னல் பார்க்கலாம்.

தாமோ : இப்பொழுது உங்களை நான் வற்புறுத்தவில்லை. அது சரியல்ல என்பதும் எனக்குத் தெரியும். ஆனல், உங்கள் கருத்துக்களையும், உங்கள் பாட்டையும் எங்கள் சங்கத்திலே கேட்கும் வரையிலே என்னுடைய ஆவல் பூர்த்தியாகாது. நான் போய்விட்டு நாளைக்கு வருகிறேன். வணக்கம்.

[போகிறன்.]

## காட்சி நான்கு

[பானுமதியின் வீடு. லலிதா உள்ளே நுழைந்து கொண்டே பேசுகிருள். மாலை நேரம்.]

லலிதா : பானு, நீயும் என்னேடு வரவேணும். மாட்டேன்னு சொல்லக்கூடாது. உன்னை அழைத்துப் போகத்தான் வந்தேன்.

பானுமதி : இப்போ எங்கே புறப்பட்டாய்?

லலிதா : கலாரசனைச் சங்கத்திற்கு...

பானுமதி : அதென்ன சங்கம்? நான் கேள்விப்பட்டதில்லையே?

லலிதா : உங்கள் அண்ணகூட அன்றைக்குப் போய் பேசிவிட்டு வந்தாரே தெரியாதா உனக்கு?

பானுமதி : அண்ணு போனுரா?

லலிதா : ஆமாம்; நான் ரொம்ப வற்புறுத்தினேன். அதனுலேதான் எப்படியோ அரை மனதாகப் போனுர்.

பானுமதி : அதுதானே கேட்டேன். உனக்காகப் போயிருப் பார். அந்த சங்கத்தை யார் நடத்துகிருர்கள்?

லலிதா : தாமோதரன்னு ஒரு ஓவியர்—அவர் நல்ல ரசிகராக இருக்கிருர்.

பானுமதி : ஓவியருக்கும் இந்தச் சங்கத்திற்கும் என்ன சம்பந்தம் லலிதா?

லலிதா : என்ன சம்பந்தமா? நல்ல கேள்வி. அவர்தான் அதற்குக் காரியதரிசி.

பானுமதி : சரி சரி...சென்னையில் இப்படி ஆயிரத்தெட்டு சங்கமிருக்கும். அவற்றை யெல்லாம் யாருக்குத் தெரியும்? இது எத்தனை காலமாக நடக்கிறதோ? யாரெல்லாம் அங்கத்தினர் என்ற விபரமெல்லாம் உனக்குத் தெரியுமா?

லலிதா : அதைப்பற்றியெல்லாம் நமக்கென்ன கவலை? தாமோதரன் நல்ல ரசிகராக இருக்கிருர்—அது போதுமே? என்னைப் பாடச் சொல்லிக்கூட ரொம்ப வற்புறுத்தினுர்.

பானுமதி : அண்ணு சம்மதித்தாரா?

லலிதா : எனக்கு இஷ்டமென்ருல் அவர் வேண்டான்னு சொல்லவே மாட்டார்.

பானுமதி : சரி லலிதா, உன்னுடைய பாட்டைக் கேட்கிற துக்கு எனக்கும் இஷ்டம்தான் வருகிறேன்,

தாமோ : அவசியம் வருகிறேன். நீங்கள்கூட எங்கள் சங்கத்திற்கு வந்தால் எங்களுக்கு மிகுந்த சந்தோஷ மாக இருக்கும். உங்களைப் போலப் படித்தவர்களெல் லாம் சங்கத்தில் கலந்து கொள்ளவேணும் என்பது என்னுடைய ஆசை.

லலிதா : அதெல்லாம் பின்னால் பார்க்கலாம்.

தாமோ : இப்பொழுது உங்களை நான் வற்புறுத்தவில்லை. அது சரியல்ல என்பதும் எனக்குத் தெரியும். ஆனால், உங்கள் கருத்துக்களையும், உங்கள் பாட்டை யும் எங்கள் சங்கத்திலே கேட்கும் வரையிலே என் னுடைய ஆவல் பூர்த்தியாகாது. நான் போய்விட்டு நாளைக்கு வருகிறேன். வணக்கம்.

[போகிறான்.]

## காட்சி நான்கு

[பானுமதியின் வீடு. லலிதா உள்ளே நுழைந்து கொண்டே பேசுகிறாள். மாலை நேரம்.]

லலிதா : பானு, நீயும் என்னோடு வரவேணும். மாட் டேன்னு சொல்லக்கூடாது. உன்னை அழைத்துப் போகத்தான் வந்தேன்.

பானுமதி : இப்போ எங்கே புறப்பட்டாய்?

லலிதா : கலாரசனைச் சங்கத்திற்கு...

பானுமதி : அதென்ன சங்கம்? நான் கேள்விப்பட்ட தில்லையே?

லலிதா : உங்கள் அண்ணாகூட அன்றைக்குப் போய் பேசி விட்டு வந்தாரே தெரியாதா உனக்கு?

பானுமதி : அண்ணு போஞரா?

லலிதா : ஆமாம்; நான் ரொம்ப வற்புறுத்தினேன். அதஞலேதான் எப்படியோ அரை மனதாகப் போஞர்.

பானுமதி : அதுதானே கேட்டேன். உனக்காகப் போயிருப் பார். அந்த சங்கத்தை யார் நடத்துகிருர்கள்?

லலிதா : தாமோதரன்னு ஒரு ஓவியர்—அவர் நல்ல ரசிகராக இருக்கிருர்.

பானுமதி : ஓவியருக்கும் இந்தச் சங்கத்திற்கும் என்ன சம்பந்தம் லலிதா?

லலிதா : என்ன சம்பந்தமா? நல்ல கேள்வி. அவர்தான் அதற்குக் காரியதரிசி.

பானுமதி : சரி சரி...சென்னையில் இப்படி ஆயிரத்தெட்டு சங்கமிருக்கும். அவற்றை யெல்லாம் யாருக்குத் தெரியும்? இது எத்தனை காலமாக நடக்கிறதோ? யாரெல்லாம் அங்கத்தினர் என்ற விபரமெல்லாம் உனக்குத் தெரியுமா?

லலிதா : அதைப்பற்றியெல்லாம் நமக்கென்ன கவலை? தாமோதரன் நல்ல ரசிகராக இருக்கிருர்—அது போதுமே? என்னைப் பாடச் சொல்லிக்கூட ரொம்ப வற்புறுத்திஞர்.

பானுமதி : அண்ணு சம்மதித்தாரா?

லலிதா : எனக்கு இஷ்டமென்ருல் அவர் வேண்டான்னு சொல்லவே மாட்டார்.

பானுமதி : சரி லலிதா, உன்னுடைய பாட்டைக் கேட்கிற துக்கு எனக்கும் இஷ்டம்தான். வருகிறேன்.

லலிதா (சிரித்துக்கொண்டே): பிரசங்கம் கேட்கிறதுக்கு இல்லையா?

பானுமதி: கல்லூரியிலே படிக்கிறபோது எத்தனையோ தடவை உன் பிரசங்கத்தைக் கேட்டிருக்கிறேனே?

லலிதா: அதுவே போதுமென்று ஆய்விட்டதாக்கும்?

பானுமதி: அப்படியில்லை லலிதா—இருந்தாலும் உன்னுடைய பாட்டுத்தான் எனக்கு ரொம்ப இஷ்டம். ஆமாம், ஏன் இப்பொழுதெல்லாம் மெல்லிசைப் பாடலாகவே பாடுகிறுய்? அதுவும் நன்ருகத்தான் இருக்கிறது.

லலிதா: மெல்லிசைதான் கவர்ச்சியாக இருக்கிறது. கர்நாடக சங்கீதத்தை யார் ரசிக்கிருர்கள்? என் பேச்சை சுருக்கமாக முடித்துக்கொண்டு பின்ஞலே பாடலாமென்றிருக்கிறேன். தாமோதரன் என்னுடைய பாட்டைக் கேட்க ரொம்ப ஆசைப்படுகிருர்.

பானுமதி: கூட்டம் எத்தனை மணிக்கு?

லலிதா: ஆறு மணிக்கு. நாம் கொஞ்சம் முன்ஞலேயே போக வேணும். தாமோதரன் சமீபத்தில் தீட்டிய ஓவியங்கள் சிலவற்றைக் காண்பிக்கிறதாகச் சொல்லியிருக்கிருர்.

பானுமதி: சரி, இதோ ஒரு நிமிஷத்தில் வந்துவிடுகிறேன்.

[உள்ளே போகிருள்.]

# காட்சி ஐந்து

[கலாரசனைச் சங்கம். சிறுகூட்டம் கூடியிருக்கிறது. தாமோதரன், பானுமதி மேடையில் அமர் துள்ளனர். லலிதா எழுந்துநின்று பேசிக்கொண் டிருக்கிருள். மாலை நேரம். திரை விலகும் போது கைதட்டும் ஒலி கேட்கிறது.]

லலிதா: அன்பர்களே, பெண்கள் முன்னேற்றம் என்ற விஷயத்தைப் பற்றி என்னுடைய கருத்துக்களை இது வரை சுருக்கமாகக் கூறினேன். என் பேச்சிலிருந்து மாதர் முன்னேற்றத்திலே நான் எவ்வளவு ஆர்வத் தோடிருக்கிறேன் என்பதை ஓரளவு உங்களுக்கு வெளியிட்டிருக்கிறேனென்று நம்புகிறேன். உங்களு டைய சங்கத்தின் காரியதரிசி அவர்கள் சொற்பொழி வுக்குப்பின்ஞல் சில பாடல்களும் பாடவேண்டும் என்று கேட்டுக்கொண்டதால் இப்பொழுது ஒரு பாட்டைப் பாடி என் கடமையை முடித்துக் கொள்ளலாமென்று நினைக்கிறேன். இதுவரை என் பேச்சைக் கேட்ட உங்களுக்கு என் அன்புகலந்த நன்றி.

[கையெடுத்து வணங்குகிருள். பலமான கைதட்டல். பிறகு பாடத் தொடங்குகிருள்]

மறந்து நீ வாழ்வாய்—இனிமேல்
மறப்பதே வாழ்வாம்

குழந்தைப் பருவமுதல்
கூடநாம் வளர்ந்ததும்
கொஞ்சியே இருவரும்
ஆடி மகிழ்ந்ததும் (மறந்து நீ)

நாளொரு மேனியாய்
எழில் கொண்டு நின்றதும்
நல்ல கதைகள் சொல்லி
சிரித்து மெய்மறந்ததும் (மறந்துநீ)

உணர்வெலாம் காதலாய்
ஓங்கிய காலத்தில்
ஊரைவிட்டே ஆற்றின்
ஓரத்தில் சென்றதும் (மறந்து நீ)

மாயமாய் நானென்றன்
கண்களை இழந்ததும்
மனத்தினில் ஓங்கி வந்த
கோட்டைகள் இடிந்ததும் (மறந்து நீ)

எங்குமே இருள்மயம்
ஆனதும் உளந்தனில்
எல்லையில்லாத பேர்
இருள்வந்து சூழ்ந்ததும் (மறந்து நீ)

பதியென யாரையோ
கைதொட்ட பின்னரும்
பாசத்தால் வந்திங்கே
விம்மியின் றழுததும் (மறந்து நீ)

[பாட்டின் முடிவில் பலத்த கைதட்டு ஒலி எழுகிறது. லலிதா வணங்கி அமர்கிறுள். தாமோதரன் பேச எழுகிறுன்.]

தாமோதரன் : அன்பர்களே, இன்று நமக்குச் சொற் பொழிவு விருந்தும் அமுதமயமான இசை விருந்தும் அளித்த ஸ்ரீமதி லலிதா அவர்களுக்கு நமது நன்றி

யைத் தெரிவித்துக்கொள்ளும் மகிழ்ச்சியான கடமை யைச் செய்ய நான் உங்கள் முன்னால் நிற்கிறேன். ஸ்ரீமதி லலிதா அவர்களின் சொற்பொழிவிலே முற்போக்கான கருத்துக்கள் அற்புதமாக வெளி யானதை நாம் அனைவரும் கேட்டு மகிழ்ந்தோம். இவ்வளவு அருமையான கருத்துக்களை நான் இது வரையிலும் யாரிடத்திலும் கேட்டதில்லை என்று கூறும்போது நீங்களும் என்னுடன் சேர்ந்து ஆமோ திப்பீர்கள் என்று நம்புகிறேன். (கை தட்டல்). அன்பர்களே, ஸ்ரீமதி லலிதாவின் சொற்பொழிவுக்கு ஒரு கிரீடம்போல அவருடைய இன்னிசை விருந்து அமைந்திருந்தது. (கைதட்டல்). கந்தர்வகானம், தேவகானம், அமுதகானம் என்றெல்லாம் இது வரையில் பேசக் கேட்டிருக்கிறோம். பாடக் கேட்ட தில்லை. ஆனால் அந்த அமுத கானத்தைக் கேட்கும் பாக்யம் இன்று நமக்குக் கிடைத்தது. (கைதட்டல்). இந்தக் கானத்தினால் நமது சங்கமே கந்தர்வ லோக மாக மாறிவிட்டது. ஸ்ரீமதி லலிதாவுக்கு எப்படி நன்றி கூறுவதென்றே தெரியாமல் தடுமாறிக்கொண் டிருக்கிறேன். இப்படித் தடுமாறிக் கொண்டிருக்கும் எனது உணர்ச்சிப் பெருக்கத்தையே எனது நன்றி யாக ஏற்றுக் கொள்ளும்படியும் அவரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

[பலத்த கைதட்டல். கூட்டம் கலையத் தொடங்கு கிறது.]

## காட்சி ஆறு

[லலிதாவின் மாளிகை. லலிதாவும் பானுமதியும் அமர்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள். இரவு எட்டு மணி.]

லலிதா : பானு, தாமோதரன் ரொம்ப அழகாகப் பேசுகிறார்—இல்லையா?

பானுமதி : அபாராமாகப் புகழ்ச்சி பாடுகிறார்.

லலிதா : அவர் கலைஞரல்லவா? அவருடைய உள்ளத்திலிருந்து உணர்ச்சிகளெல்லாம் அப்படி வெளியாகிறது.

பானுமதி : எனக்கென்னவோ அது உண்மை உணர்ச்சியாகவே படவில்லை. அவர் பேச்சே ஏதோ மேல் பூச்சு மாதிரி தொனித்தது.

லலிதா : நான் அப்படி நினைக்கவில்லை.

பானுமதி : உனக்குத்தான் இப்படிப் பேச்சிருந்தால் அதுவே திருப்தி—உள்ளத்திலே இருப்பதைப்பற்றி உனக்குக் கவலை ஏது ?

லலிதா : பானு, நீ உன் அண்ணாவுடைய வாதத்தை ஆரம்பித்துவிடாதே. அது கிடக்கட்டும்—தாமோதரன் தீட்டியிருக்கும் ஓவியங்களைப் பற்றி என்ன நினைக்கிறாய் ?

பானுமதி : எனக்கு அது ஒன்றுமே விளங்கவில்லை. உருவத்தையே காணோம்—தாறுமாறாக என்னவோ கிறுக்கியிருக்கிறது.

லலிதா (சிரித்துக்கொண்டே) : பானு, உனக்கு இந்தக் காலத்து நவீன ஓவிய மரபெல்லாம் ஒன்றுமே தெரியாது போலிருக்கிறது.

பானுமதி : எனக்குத் தெரியவே வேண்டாம்—இதுதான் ஓவியமென்ருல் யார் வேண்டுமாஞலும் ஓவியராகி விடலாம். தாமோதரன்கூட இப்படித்தான் ஓவிய ராகி இருக்கிருர் போலிருக்கிறது.

லலிதா : நவீன ஓவியம் கலையுலகத்திலே ஒரு புதிய யுகத்தையே ஆரம்பிக்கப் போகிறதென்று நான் நினைக்கிறேன்.

பானுமதி : லலிதா, நீ உண்மையாகத்தான் பேசுகிருயா அல்லது ஏதோ மயக்கத்திலே இருக்கிருயா ?

லலிதா : ஏன் அப்படிக் கேட்கிருய் ?

பானுமதி : நவீன ஓவிய மரபைப் பற்றி எனக்கும் கொஞ்சம் தெரியும். அந்த மரபின் பேரைச் சொல்லிக்கொண்டு வேஷம் போடுகிறவர்களையும் எனக்குத் தெரியும். தாமோதரனுடைய படங்களிலே ஒரு மண்ணும் கிடையாது. அவருக்கு ஓவியத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாதென்று அவர் விளக்கம் கூறும்போதே எனக்குத் தெரிந்துவிட்டது.

லலிதா : நவீனப் புது மரபுக் கலைகளைப் பற்றி உன்னைப் போல இப்படிப் பேசுகிறவர்களும் உண்டு என்று எனக்குத் தெரியும்.

பானுமதி : அது வாஸ்தவந்தான் லலிதா—புது மரபைப் பற்றி மாருன கருத்துக்கள் உண்டுதான். ஆனுல், புது மரபின் பெயரைச் சொல்லித் திரியும் போலியை நீ அறியவில்லை என்பதுதான் என்னுடைய அபிப் பிராயம்.

[சதாசிவம் வருகிருன்.]

சதாசிவம் : என்ன பானுமதி, ரொம்ப சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டிருக்கிறீர்களே ?

பானுமதி : அண்ணு, வந்துவிட்டீர்களா ? பாங்கு முடிய இவ்வளவு நேரமா ?

சதாசிவம் : இன்றைக்கு எதிர்பாராத விதமாக வேலை இருந்தது. தினமும் இவ்வளவு நேரமாகாது ..... லலிதா, கொஞ்சம் சூடாகக் காப்பி கொண்டுவா— ஏனோ தலை வலிக்கிறது.

லலிதா : சாயங்காலம் காப்பி சாப்பிடாமல்கூட வேலை செய்திருப்பீர்கள். அதுதான் தலை வலிக்கிறது. இதோ ஒரு நிமிஷத்தில் காப்பி போட்டு வருகிறேன்.

[வேகமாக உள்ளே போகிறுள் ]

பானுமதி : அண்ணு, இன்றைக்கு லலிதா ரொம்ப அழகாகப் பாடிஞள்.

சதாசிவம் : அப்படியா ? அவள் பாட்டென்ருல் எனக்கு உயிர். வேலைக்குக்கூடப் போகாமல் அதையே கேட்டுக்கொண்டிருந்து விடலாம் என்றுகூடச் சில சமயங்களிலே தோன்றும்.

பானுமதி : அதை அவளிடத்திலே சொல்லுங்களேன் அண்ணு ?

சதாசிவம் : என்ன நீயுமா இப்படிப் பேசுகிருய் ?

பானுமதி : வானளாவப் புகழ்ந்து யாராவது பேசவேணு மென்றுதான் அவளுக்கு ஒரே ஆசை. அது ஒன்றிருந் தால் அவளுக்கு எல்லாம் திருப்தியாக இருக்கும்.

சதாசிவம் : பானு, இந்த வெளிப்பகட்டைக் கண்டு நமது உணர்ச்சியே மழுங்கிப் போய்விட்டது. உண்மை யான உள்ளன்பைத் தெரிந்துகொள்ளக்கூட முடிகிற தில்லை. நாடகத்திலே பேசுபவரைப்போல உதட்டிலே தேன் சொரிந்தால் அது போதும்.

பானுமதி : உண்மையான அன்பிருக்கும்போது அதை யாவது பேசலாமல்லவா ?

சதாசிவம் : எதுக்குப் பேசவேணும் ? அது தானகவே தெரியாதா ? சொல்லித் தெரிகிற அன்பு அது கொஞ்சம் குறைச்சலானதுதான் என்பது என் னுடைய அபிப்பிராயம்.

பானுமதி : அண்ணு, உங்களிடத்திலேயும் நான் இதைப் பற்றிப் பேச முடியாது ; லலிதாவிடத்திலும் பேச முடியாது. இரண்டு பேருடைய அபிப்பிராயத்தையும் மாற்றவே முடியாது போங்கள்.

சதாசிவம் : பானுமதி, நீ அதைப்பற்றிக் கவலைப்படாதே. லலிதா தன் அபிப்பிராயம் சரியல்லவென்று நிச்சயம் தெரிந்து கொள்ளுவாள்.

பானுமதி : அதுவரைக்கும் எல்லாம் கோணலில்லாமல் நடக்க வேணுமே அண்ணு ?

சதாசிவம் : அதிலே எனக்குத் துளிகூடச் சந்தேகமில்லை. அந்த அளவுக்கு நான் லலிதாவை அறிந்திருக்கிறேன்.

பானுமதி : சரி அண்ணு, பார்ப்போம். எனக்கென்னவோ கொஞ்சம் கவலையாக இருக்கிறது.

சதாசிவம் : கவலையே வேண்டாம். எங்கே லலிதாவை இன்னும் காணேமே ?

பானுமதி : இதோ பார்த்து வருகிறேன்...லலிதா.

[கூப்பிட்டுக்கொண்டே உள்ளே போகிருள் ]

# இரண்டாம் அங்கம்

## காட்சி ஒன்று

[பானுமதியின் வீட்டில் ஓர் அறை பானுமதி ஏதோ படித்துக்கொண்டிருக்கிருள். லலிதா நுழைகிருள். மாலை நேரம்.]

லலிதா : பானுமதி, இருக்கிருயா ? எங்காவது போயிருப் பாயோ என்று சந்தேகத்தோடேயே வந்தேன்.

பானுமதி : லலிதா, நேற்று சாயங்காலம் எங்கே வெகு நேரம்வரையிலும் காணவே இல்லையே ?

லலிதா : நேற்று எங்கள் வீட்டிற்கு வந்திருந்தாயா ?

பானுமதி : ஆமாம், இரவு ஒன்பது மணி வரையிலும் அங்குதான் காத்திருந்தேன். உன்னைத்தான் காணேம்.

லலிதா : அண்ணு இருந்தாரா ?

பானுமதி : ஆமாம். நீ கலாரசனை சங்கத்திலே பிரசங்கம் செய்யவோ பாட்டுப் பாடவோ போயிருப்பதாகச் சொன்ஞர்.

லலிதா : அவரே சொல்லியிருக்கும்போது மறுபடியும் எதற்கு இப்போ என்னைக் கேட்கிருய் ?

பானுமதி : சங்கத்திற்குப் போயிருந்தாலும் அவ்வளவு நேரமாகியிருக்காதே என்றுதான் கேட்டேன்.

லலிதா : நிலா வெளிச்சம் அற்புதமாக இருந்தது. அப்படியே சமுத்திரக் கரைக்குப் போனேம். நில வொளியிலே பிரகாசிக்கும் கடலின் அழகைத்

தாமோதரன் ஓவியமாக வரைந்திருக்கிறார்—நீ அதைக் கட்டாயம் பார்க்க வேணும்.

பானுமதி: தாமோதரனா ?

லலிதா: ஆமாம்—கடற் காட்சிகளை ஓவியமாகத் தீட்டுவதற்காகவே அவர் சென்னையில் தங்கியிருக்கிறார்.

பானுமதி: லலிதா, உங்கள் வீட்டிலே ஒரு அறை முழுவதும் பார்சல்களும் பெட்டிகளும் போட்டிருக்கிறாயே ? அவையெல்லாம் என்ன ?

லலிதா: அவையெல்லாம் ஓவியம் தீட்டுகிற சாமான்கள். அந்தப் பெட்டிகளிலே இருப்பதெல்லாம் வர்ணங்கள்.

பானுமதி: என்ன, நீயும் ஓவியம் தீட்ட ஆரம்பித்து விட்டாயா ?

லலிதா (சிரித்துக்கொண்டே): இல்லை பானு, தாமோதரனுடைய பெட்டிகள் அவை. அவருடைய அறையிலே புதிய ஓவியங்கள் நிறைய இருப்பதால் வைப்பதற்கு இடமில்லை என்று இங்கே வைத்திருக்கிறார்.

பானுமதி: வர்ணப் பெட்டிகளா அவையெல்லாம் ? என்னவோ சாராய நாற்றம் அடித்ததே ?

லலிதா (மேலும் சிரித்துக்கொண்டே): பானு, உனக்கு ஓவிய வர்ணங்களைப்பற்றி ஒன்றுமே தெரியாது. ஸ்பிரிட்டில்தான் அவற்றைக் கலக்கியிருப்பார்கள். அதுதான் அந்த வாசனை.

பானுமதி: இருந்தாலும் இத்தனை பெட்டிகளில் வர்ணம் வைத்திருப்பதை நான் கண்டதில்லை—ஒருவேளை நவீன ஓவியத்துக்கு இப்படியெல்லாம் வேணுமோ

என்னவோ ? அதிலும் இவர் சமுத்திரத்தையே போடுகிறவராச்சே ?

லலிதா : அடடா, உன்னுடைய ஹாஸ்யம் பலே ஜோர். அது கிடக்கட்டும் பானு, இன்றைக்கு டீ பார்ட்டிக்கு வருகிருயா இல்லையா ?

பானுமதி : எங்கே பார்ட்டீ ? கலாரசனைச் சங்கத்திலா ?

லலிதா : ஆமாம், அந்த சங்கம் ஒன்றுதான் உனக்குத் தெரியும் ? வேறு இடத்திலே பார்ட்டியே கிடையாதா ?

பானுமதி : தாமோதரன் வருகிருரா ?

லலிதா : அவர்தான் ஊரிலேயே இல்லையே ? கோடைக்கானலுக்குப் போயிருக்கிருர்.

பானுமதி : அங்கென்னவாம் ?

லலிதா : மலைக்காட்சி ஓவியம் எழுதப் போயிருக்கிருர். இப்படி அடிக்கடி அவர் வெளியே போய்விடுகிருர். வரும்போது ஒரு புதிய ஓவியம் கொண்டு வருகிருர்.

பானுமதி : அவர் வரைகின்ற ஓவியத்துக்கு எங்கேயும் போக வேண்டியதில்லையே ?

லலிதா : ஏன் வேண்டியதில்லை ?

பானுமதி : பார்க்கிற காட்சிக்கோ பொருளுக்கோ அவர் ஓவியத்திலே இடத்தையே காணுமே ?

லலிதா : இருந்தாலும் அந்தக் காட்சிகள்தான் அவருக்கு உள்ளத்திலே கற்பனை பொங்கச் செய்திருக்கும். திடீரென்று அவர் வருவார். பெட்டிகளும் ஐந்தாறு வரும். பிறகு சில நாட்களிலே பெட்டிகளைத் தூக்கிக்கொண்டு எங்கேயோ போய்விடுவார்.

பானுமதி : உன்னுடைய வீடு அவருக்கு நல்ல உக்கிராண அறையாக ஆகிவிட்டது. அப்படித்தானே ?

லலிதா : பானு, ஒரு கலைஞருக்கு உதவி செய்வதை நான் ஒரு பெரிய பாக்கியமாகக் கருதுகிறேன்.

பானுமதி : அண்ணாவுக்கு இதெல்லாம் தெரியுமா ?

லலிதா : தெரியாமல் இதிலே ரகசியம் என்ன இருக்கிறது?

பானுமதி : அவருக்குச் சம்மதமென்றால் எனக்கொன்றும் ஆட்சேபமில்லை.

லலிதா : பானு, அவர் எனது விருப்பத்துக்கு மாறாக ஒன்றுமே சொல்லமாட்டார்.

பானுமதி : சரி, டீ பார்ட்டி எங்கே ? அதை விட்டு விட்டாயே ?

லலிதா : நம்மகூடக் கல்லூரியிலே படித்தாளே சரோஜா, அவள் வீட்டில்தான். நீ இங்கு வந்திருக்கிற விஷயத்தை இன்றைக்கு நான் சொன்ன பிறகுதான் அவளுக்குத் தெரியும். உன்னைக் கண்டிப்பாக கூட்டிக்கொண்டு வரும்படி சொன்னாள்.

பானுமதி : யார், அந்த ஊர் வம்பெல்லாம் பேசுவாளே அந்த சரோஜாவா ?

லலிதா : ஆமாம், அவளேதான். செய்தி விளம்பர இலாக்காவுன்னு கேலி செய்வோமே அவளேதான். இன்றைக்கும் அதே மாதிரிதான் இருக்கிறாள்.

பானுமதி : அவள் சென்னையிலேதான் இருக்கிறாளா ? எனக்கு இத்தனை நாளாக நீ சொல்லவே இல்லையே ?

லலிதா : அவளோடு நான் அதிகமாக வைத்துக் கொள்வதில்லை. எப்பவாவது இப்படித் தவிர்க்க முடியாமல் அகப்பட்டுக்கொண்டால்தான் போவேன்,

பானுமதி : அவள் அப்படி மோசமில்லை லலிதா. என்னமோ ஊர் விஷயங்களைத் தெரிந்து கொள்ளு வதிலே அவளுக்கு ஆசைதான். ஆனால், மனசிலே கெட்ட எண்ணம் கிடையாது.

லலிதா : நீயும் கட்டாயமா வா—நான் மட்டும் தனியாகப் போனால் அவள் வம்பளப்பதை என்னால் சகிக்க முடியாது.

பானுமதி : சரி லலிதா, நான் தயார். அவளையும் பார்த்தது போலாகும். ஒரு நிமிஷம் பொறுத் துக்கோ ; ஒரு நொடியிலே வந்துவிடுகிறேன்.

[வேகமாக உள்ளே போகிறாள்.]

## காட்சி இரண்டு

[சரோஜாவின் வீடு. பானுமதியும் சரோஜாவும் அமர்ந்திருக்கிறார்கள்.]

பானுமதி : சரோஜா, என்னவோ தனியாகப் பேச வேணும்னு சொன்னாயே ?

சரோஜா : ஆமாம், பானு—எங்கே, லலிதா போய்ட் டாளா ?

[சுற்றிப் பார்க்கிறாள்.]

பானுமதி : ஏதோ அவசரமாம், யாரையோ சந்திக்க வேணும்னு போய்ட்டா.

சரோஜா : அவள் இல்லாதபோதுதான் உன்னிடம் சொல்ல வேணும்னு நினைத்தேன். உன்னைவிட அந்தரங்க சிநேகிதை அவளுக்கு யார் இருக் கிறார்கள் ?

பானுமதி : என்ன விஷயம் சரோஜா ?

சரோஜா : உனக்கே தெரிஞ்ச விஷயந்தான். இருந்தாலும் சொல்லி வைக்க வேணும்னு நினைத்தேன். கோவிச்சுக்க மாட்டாயே ?

பானுமதி : சொல்லு சரோஜா, எனக்கென்ன கோவம் ?

சரோஜா : நம்ம லலிதாவைப் பற்றித்தான் ஊரெல்லாம் பேசிக்கிருர்கள்......

பானுமதி : லலிதாவைப் பற்றியா ?

சரோஜா : ஆமாம். அந்த ஓவியன் ஒருத்தன் வந்திருக்கிருனல்லவா ? லலிதா அவனோடு அடிக்கடி சுற்றிக் கொண்டிருப்பதைப்பற்றித்தான்......

பானுமதி : ம்......?

சரோஜா : எல்லோரும் எப்படி எப்படியோ சொல்லுகிருர்கள் ?

பானுமதி : விஷயம் புரிஞ்சுது சரோஜா. ஆனல், நான் ஒன்னு சொல்லுகிறேன். அதை நீ நம்புவாயா ?

சரோஜா : உனக்குத்தான் உண்மை தெரிஞ்சிருக்கும். எதுக்கும் லலிதாவுக்குக் கெட்ட பேர் வர்ரதைத் தடுக்க வேணும்னு நான் நினைத்தேன்.

பானுமதி : இப்படி வெளியிலே வதந்தி கிளம்பும்னு நான் அப்பவே பயப்பட்டேன். ஆனல், லலிதாவைப் பற்றிய உண்மை எனக்குத் தெரியும். அண்ணுவுக்கும் தெரியும். அதை வெளியிலே சொன்னல் யாருமே நம்புவது கஷ்டம்.

சரோஜா : என்ன, சதாசிவத்துக்கும் தெரியுமா என்ன ?

பானுமதி : அண்ணுவைப்பற்றி உனக்கு அவ்வளவாகத் தெரியுமோ என்னவோ, அவர் மற்றவர்களுடைய

மனசு எப்படி வேலை செய்கிறது என்பதை அறிந்து கொள்ளுவதிலே ரொம்பக் கெட்டிக்காரர். அதிலே யும் லலிதாவைப்பற்றி அவர் முழுக்க முழுக்கத் தெரிந்துகொண்டிருக்கிறார்.

சரோஜா : தெரிஞ்சா இப்படி விட்டிருக்கிறார் ?

பானுமதி : அடிப்படையா எதுவும் தப்பு நடக்காதுன்னு அவருக்கு நிச்சயமாகத் தெரியும். நானும் அப்படித் தான் நினைக்கிறேன். அதனாலே லலிதாவுக்குச் சில அனுபவங்களெல்லாம் ஏற்படட்டும்னு அவர் பேசாம லிருக்கிறார்.

சரோஜா : அதென்ன பானு ? நீ சொல்லரது எனக்குப் புரியவில்லையே ?

பானுமதி : எல்லோருக்கும் அது புரியரது சிரமந்தான். ஏன் என்றால் எல்லோரும் அண்ணாவைப் போல இருக்க மாட்டார்கள்.

சரோஜா : என்ன பானு, விஷயத்தைதான் கொஞ்சம் நல்லா விளக்கமாகச் சொல்லேன்.

பானுமதி : நாம் படிக்கிற நாவல், பார்க்கிற சினிமா எல்லாம் இருக்கிறதோ இல்லையோ ?

சரோஜா : ஆமாம். நாம் தெரிஞ்சுக்கிற தெல்லாம் முக்கியமாக மேல்நாட்டு விஷயந்தான்—நம்ம பண் பாடு நம்ம சமூகப் பழக்கவழக்கங்கள் இதெல்லாம் ஏதோ வீட்டுப் பழக்கங்களினாலே வந்ததே ஒழிய நாம் அதை எங்கே கற்றுக்கொள்ளுகிறோம் ?

பானுமதி : அதிலும் லலிதாவின் தாயார் லலிதா சின்னக் குழந்தையாக இருக்கிறபோதே காலமாகி விட்டாள். அப்பாதான் அவளைச் செல்லமா

வளர்த்தார். படிக்கிற போதெல்லாம் ஹாஸ்டல் வாழ்க்கைதான். வீட்டுப் பழக்கமே அவளுக்குத் தெரியாது.

சரோஜா : அது வாஸ்தவந்தான் — மேல்நாட்டு நாவல் களிலே வருகிற விஷயந்தான் வாழ்க்கையின்னு நினைத்துக்கொண்டிருப்பாள்.

பானுமதி : இருந்தாலும், அடிப்படையான கொள்கை எப்படியோ நம்மையெல்லாம் கெட்டியாகப் பிடித் துக் கொண்டிருக்கிறது. அருந்ததி, சாவித்திரி முதலியவர்களின் கதைகள்தான் நம்மை விடாமல் காப்பாற்றுகிறது சரோஜா. லலிதா விஷயமும் அப்படித்தான்.

சரோஜா : எனக்கும் இந்தமாதிரி சந்தேகம் அடிக்கடி வருகிறது. நேற்று, தாமஸ் ஹார்டி எழுதிய நாவல் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தேன். அதிலே கணவனையிழந்த கதாநாயகி தனது குழந்தைகளைக் காப்பாற்றுவதற்காகத் தன் உடம்பை விற்றுவிடு கிறாள். அதுவே நியாயம் என்பது போல அந்த நாவலைப் படிக்கிறபோது ஏற்படுகிறது. ஆனால், நம் நாட்டுக் கருத்துப்படி இதை ஏற்றுக்கொள்ள முடியாது. இப்படி எத்தனையோ மாறுபட்ட கருத் துக்களை நாம் மனசிலே வாங்கிக்கொண்டு தொல்லைப் படுகிறோம்.

பானுமதி : லலிதா விஷயம் இன்னும் விநோதமானது. மகனிடத்திலே அளவுகடந்த பற்றுதலையுடைய தாயைப்பற்றி நீ படித்திருக்கிறாயல்லவா ? மனத் தத்துவ சாஸ்திரத்திலே நமக்குக் கற்றுக் கொடுத் தார்களே ?

சரோஜா : ஆமாம்—தனது வாழ்க்கையிலே கணவனிடம் காண முடியாதவற்றை யெல்லாம் மகனிடம் காண ஆசைப்படுகின்ற தாயைப்பற்றிப்படித்திருக்கிறேன்.

பானுமதி : அப்படிப்பட்ட ஒரு வகையான பயித்தியந் தான் லலிதாவையும் பிடித்துக் கொண்டிருக்கிறது. தனியே சந்தித்துக் காதல் கொள்ளுவது, ரகசிய மாகச் சந்திப்பது என்றிப்படியெல்லாம் அவள் வாழ்க்கையிலே நடக்கவில்லை.

சரோஜா : அந்த ஆசையா இப்படி வெளியாகிறது ?

பானுமதி : அதிலும் வேடிக்கை யென்னவென்றால், தாமோதரனைப்பற்றி லலிதாவுக்குக் கொஞ்சம்கூட மதிப்பில்லை. அவனை ஒரு தனி மனிதனாகவே அவள் கருதவில்லை.

சரோஜா : அதெப்படி முடியும் பானு ?

பானுமதி : அதுதானே வேடிக்கை. தாமோதரன் ஒரு வியாஜந்தான். அவன் ஒரு உயிரில்லாத கருவி. அவன் மூலம் லலிதா சதாசிவத்தையே பார்க்கிறாள்.

சரோஜா : என்னமோ பானு, நீ சொல்லுவது எனக்குப் புதிராகத்தான் இருக்கிறது. கொஞ்சமும் புரிய வில்லை.

பானுமதி : யாருக்குமே இப்போ புரிவது கஷ்டந்தான். ஆனால், லலிதாவின் பிரமை சீக்கிரத்தில் சிதறிப் போய்விடும். சந்தேகமேயில்லை.

சரோஜா : அப்படித்தான் நடக்க வேணும்னு நான் ஆசைப்படுகிறேன்.

பானுமதி : அதைத்தான் நானும் எதிர்பார்த்திருக் கிறேன். அண்ணா சதாசிவமும் அதைத்தான் எதிர் பார்க்கிறார்.

சரோஜா : இருந்தாலும் உங்கள் அண்ணாவின் மனத் துணிச்சல் இருக்கிறதே, அதை நான் ஒப்புக் கொள்ள முடியாது.

பானுமதி : அவளுடைய காதலிலே அவருக்கு அத்தனை நம்பிக்கையிருக்கிறது. தம்முடைய காதல் வலி மையே லலிதாவைக் காப்பாற்றும் என்றும் அவர் நிச்சயமாக நம்புகிறார்.

சரோஜா : நல்ல நம்பிக்கையம்மா. பானு, நீ எப்போ கல்கத்தாவுக்குத் திரும்பிப் போகிறாய் ?

பானுமதி : இன்னும் இரண்டு வாரத்தில்......

சரோஜா : அதுவரையிலும் நீ லலிதாவை நன்றாகக் கவனித்துக்கொள்.

பானுமதி : அது சரி, சரோஜா. உன்னிடத்திலே ஒன்று கேட்டுகொள்ள ஆசை. நீ இந்த விஷயத்தை என்னிடம் தனியாகச் சொன்னதுக்கு ரொம்ப நன்றி சொல்ல வேணும்.

சரோஜா: இதெல்லாம் எதுக்கு, பானு ? லலிதா விஷ யத்திலே எனக்கு மட்டும் அக்கறையில்லையா ? அவளுக்குத்தான் என்னைக் கண்டால் அவ்வளவு பிடிக்காது.

பானுமதி : அப்படி ஒன்றுமில்லை சரோஜா, உன்னைப்பற்றி அவளுக்கும் பிரியம் உண்டு. நீ இந்த விஷயத்தைப் பற்றி வெளியிலே யாரிடத்திலும் பேசாதே. நான் கல்கத்தாவுக்குப் போகிறதுக்குள் உன்னை மறுபடியும் சந்திக்கிறேன். போய் வரட்டுமா ? மறுபடியும் டீபார்ட்டி வைத்தால், என்னை மறந்துடாதே.

[புறப்படுகிறாள்.]

## காட்சி மூன்று

[கடற்கரை. தாமோதரனும் லலிதாவும் மணலில் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கிறார்கள். முழு நிலவின் ஒளி படர்ந்திருக்கிறது.]

தாமோ: இந்த இனிமையான தேன் நிலாவிலே இதைக் கந்தர்வலோக மாக்குவதற்கு ஒன்றுதான் வேண்டும்.

லலிதா: என்ன வேண்டும்?

தாமோ: அது உங்களுக்குத் தெரியாதா? உங்களுடைய பாட்டுத்தான் அது. தேன் நிலவிலே ஊறுகின்ற அமுதத் துளிகள்தான் அந்தப் பாட்டு.

லலிதா (மகிழ்ச்சியோடு): நான் என்ன அவ்வளவு நன்றாகப் பாடுகிறேனா?

தாமோ: அதைப்பற்றிப் பேசி என்ன பிரயோஜனம்? பேசத்தான் முடிகிறதா என்ன?

லலிதா: பாட்டுக்கு ஒரு தனிப்பட்ட சக்தி இருக்கத்தான் செய்கிறது.

தாமோ: எல்லோருடைய பாட்டுக்கும் அந்த சக்தி இருக்கிறதாக நான் சொல்லமாட்டேன். உங்களுடைய பாட்டுக்கு அந்த மோகன சக்தி நிச்சயமாக உண்டு. இப்பொழுது நீங்கள் ஒரு பாட்டுப்பாடுங்கள்—இந்த உலகமே சொக்கிப் போவதை நான் பார்க்கப் போகிறேன்; பாடுங்கள்.

லலிதா (மகிழ்ச்சியோடு பாடத் தொடங்குகிறாள்):

பல்லவி

குழலோசை கேட்குதடி—கண்ணன்
குழலோசை கேட்குதடி

அனுபல்லவி

அழகான தேன் நிலவில் அமுதூறும் ஓசையடி
கழலோசை செய்தவனும் கண்ணெதிரே வாரானோ
(குழ)

சரணம்

நீல வண்ணக் கண்ணனவன்
நெஞ்சை யள்ளும் கள்வனவன்
கால வெள்ளம் தாண்டியெங்கும்
காதல் பொங்க வாரானோ (குழ)

தாமோ : லலிதா, குழலினுடைய நாதம் பொங்கியதும் என்ன ஏற்படும் என்று உங்களுக்குத் தெரியுமா?

லலிதா : குழல் ஒரு அற்புதமான வாத்தியம். அதன் இசையிலே எங்கும் இன்பம் பொங்கும். பாட்டிலேயே அதைப் பாடிவிட்டேனே!

தாமோ : இன்பமென்று மட்டும் சொல்லாதீர்கள் லலிதா. அது வெறும் இன்பமட்டுமல்ல. அது காதலின்பம். பாட்டிலும் அப்படித்தானே பாடினீர்கள்? கரை காண முடியாத காதலின்பம் அதிலே பிறக்கிறது. நீங்கள் பாடுகின்றபோது அது பொங்கியெழுந்துவிட்டது. இந்தத் தேன் நிலாவிலே குழைந்து இன்பமளிக்கும் மற்றொரு பொருள் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா?

லலிதா : நீங்களே சொல்லுங்கள். கலைஞராகிய உங்களால் தான் அதை நன்றாக வெளிப்படுத்த முடிகிறது.

தாமோ : அது அந்தக் காதல்தான். லலிதா உங்களுக்கு இதைவிட வேறு என்ன நான் சொல்ல வேண்டும்? காதல் கொண்ட உள்ளம் பேசத் தடுமாறுகிறது.

லலிதா (யோசனையோடு) : என்ன சொன்னீர்கள், காதலா...?

தாமோ : ஆமாம்; அதைச் சொல்லாமல் என்னால் இனி மேல் தாங்க முடியாது. இந்தத் தேன் நிலவிலே......

லலிதா (திடுக்கிட்டு) : ஆ ..ஹ...ம் — தாமோதரன்! கொஞ்சம் அப்படியே இருந்து பேசுங்கள். நீங்கள் சொல்கிறது எனக்குப் புரியவில்லை.

தாமோ : இத்தனை நாட்களாகப் பழகியும் இன்னும் புரியவில்லையா? நான் உங்களுடைய உள்ளத்தை நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறேனே? நீங்கள் புரிந்துகொள்ளவில்லையா? உங்களுடைய உள்ளம் என்னுடைய உள்ளத்தோடு ஒட்டிக் கிடக்கிறதை நான் அறியாதவனா என்ன?

லலிதா : போதும்—பேச்சை நிறுத்துங்கள். உங்கள் பேச்சு வரம்பு கடந்து போகிறது,

தாமோ : லலிதா, என் கனவுக் கோயிலிலே நீங்கள் தான் தெய்வம். அந்தக் கோயிலை உடைத்தெறிந்து விடாதீர்கள். என் இதயமே வெடித்துப் போகும்.

லலிதா (கோபமடைந்து) : தாமோதரன், நீங்கள் இவ்வளவு கேவலமான எண்ணமுடையவரென்று நான் எதிர்பார்க்கவேயில்லை. நீங்கள் ஒரு அயோக்கியன். உங்களுடன் பழகியதே தப்பு என்று இப்பொழுதுதான் தெரிகிறது. நான் இதோ வீட்டுக்குப் புறப்படுகிறேன். இன்னும் ஒரு மணி நேரத்துக்குள் நீங்கள் அங்கு வந்து உங்களுடைய பெட்டிகளை 'யெல்லாம் எடுத்துக்கொண்டு போய் விடுங்கள். இல்லாவிட்டால் போலீசில் பெட்டிகளை ஒப்படைத்துவிடுவேன்.

தாமோ : என்ன, போலீசிலா?

லலிதா : நீங்கள் வந்து எடுத்துக்கொள்ளா விட்டால் வேறு என்ன வழி? இங்கே உங்களோடு இன்னும் பேசிக்கொண்டிருக்க எனக்கு இஷ்டமில்லை. நான் போகிறேன்.

தாமோ : உங்களோடேயே வந்து பெட்டிகளை எடுத்து வந்துவிடட்டுமா? உங்கள் காரில்...நான்...நான்...

லலிதா : என்னோடு நீங்கள் வரக்கூடாது. வேண்டுமானால் வேறு டாக்ஸி வைத்துக்கொண்டு பின்னாலேயே வரலாம்.

[வேகமாகப் புறப்படுகிறாள்.]

தாமோ : அடே, இவளென்ன திடீரென்று இப்படிப் பேச ஆரம்பித்துவிட்டாளே? இவளைப் புரிந்து கொள்ளவே முடியவில்லையே? அதுதான்போகட்டும். போலீஸ் ஸ்டேஷனுக்குப் பெட்டிகளை அனுப்பி விடுவாளாம்? அது வேறு தொந்தரவாச் சே...ஆனால். நல்லவேளை... இன்னும் ஒரு மணிக்குள்ளே போய் எடுத்துவர முடியாதா என்ன?

[அவசரமாகப் புறப்படுகிறான்.]

## காட்சி நான்கு

[லலிதாவின் இல்லம். சதாசிவம் அமர்ந்திருக்கிறார். போலீஸ் இன்ஸ்பெக்டர் நுழைகிறார் ]

இன்ஸ்பெக்டர் : மிஸ்டர் சதாசிவம் நீங்கள்தானா?

சதாசிவம் : ஆமாம்... வாருங்கள், என்ன விஷயம்?

இன்ஸ்பெக்டர் : இந்த நேரத்தில் உங்களுக்குத் தொந் தரவு கொடுக்கிறதுக்காக மன்னிக்கவேணும்-கள்ளச்

சாராய வியாபரம் செய்கிறவர்களைப் பிடிக்கிற தனிப் பட்ட பணியில் நான் இருக்கிறேன்.

சதாசிவம் : சந்தோஷம்—ஆனால்...இங்கே...

இன்ஸ்பெக்டர் : உங்கள் மனைவியின் பெயர்தானே லலிதா என்பது?

சதாசிவம் : ஆமாம்—அதற்கென்ன?

இன்ஸ்பெக்டர் : அவர்கள் ஏதோ ஒரு ஓவியனுக்கு இங்கே சாமான்களையெல்லாம் வைத்துக்கொள்ள இடம் கொடுத்திருக்கிறதாகக் கேள்விப்பட்டேன்.

சதாசிவம் : ஓஹோ, அப்படியா விஷயம்? அந்த ஓவியர் ஏதோ வர்ணப் பெட்டிகளை யெல்லாம் வைத்துக் கொள்ள இடம் கொடுக்க வேண்டுமென்று என்னைத் தான் கேட்டார். நான்தான் அவருக்கு இடம் கொடுத்தேன். என் மனைவிக்கும் அதற்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது.

இன்ஸ்பெக்டர் : அவன் வர்ணப் பெட்டிகளென்று சொல்லிக் கொண்டு கள்ளச் சாராயம் வைப்பதற்கு நல்ல இடம் கண்டுபிடித்திருக்கிறான். உங்களை ஏமாற்றியிருக்கிறான்.

[லலிதா வருகிறாள்.]

சதாசிவம் : இதோ, என் மனைவியும் வந்துவிட்டாள். வா லலிதா, டீ பார்ட்டி முடிந்ததா?

லலிதா (கலவரத்தோடு) : ஆமாம், இவர் யார்? எதற் காக வந்திருக்கிறார்?

இன்ஸ்பெக்டர்: அம்மா, உங்களிடம் ஒரு விஷயம் விசாரிக்க வேண்டும் என்று...

சதாசிவம் : நானே விஷயததை அவளுக்குச் சொல்லி விடுகிறேன். நீங்கள் கொஞ்சம் பொறுக்க வேணும். லலிதா, அந்த ஓவியன் என்னை வந்து கேட்டானல்லவா? அவனுடைய வர்ணப் பெட்டிகளை இங்கே வைத்துக்கொள்ள நான்தான் அவனுக்கு அனுமதி கொடுத்தேனென்று சற்று முன்புதான் இன்ஸ்பெக்டரிடம் சொல்லிக்கொண்டிருந்தேன்...

லலிதா : வர்ணப் பெட்டிகளையா? அதைப்பற்றி என்ன இப்பொழுது?

சதாசிவம் : அவை வர்ணப் பெட்டிகள் இல்லையாம்... திருட்டுச் சாராயம் வைத்திருக்கும் பெட்டிகளாம்!

லலிதா (திடுக்கிட்டு) : அப்படியா?...இன்ஸ்பெக்டர் சார், அந்த ஓவியனுக்கு இடம் கொடுத்தது நான்தான். இவருக்கு அந்த விஷயமே தெரியாது. அந்தக் குற்றமெல்லாம் என்னுல் நடந்ததுதான்.

சதாசிவம் : இன்ஸ்பெக்டர், அவள் என்னை இதில் சிக்க வைக்கக்கூடாதென்று இப்படிப் பேசுகிருள். உண்மையில் நான்தான் இந்தக் குற்றத்திற்குப் பொறுப்பாளி.

இன்ஸ்பெக்டர் : நீங்கள் இரண்டு பேரும் கூறுவதிலிருந்து எனக்கு விஷயம் தெளிவாகத் தெரிகிறது. அதாவது அவன் தன்னை ஒரு ஓவியன் என்று உங்களை நம்பும் படி செய்து உங்கள் வீட்டையே தனது திருட்டு வியாபாரத்திற்கு உபயோகப்படுத்தியிருக்கிருன்.

லலிதா : அவன் ஒரு அயோக்கியன் என்று சற்று முன்பு தான் எனக்குத் தெரியவந்தது.

இன்ஸ்பெக்டர் : அவன் ஓவியன்கூட அல்ல, எல்லாம் ஏமாற்றுவித்தை. வெளியூருக்கு அவன் போவதெல்லாம் இந்த வியாபாரத்திற்குத்தான்.

லலிதா : அப்படியா? ஐயோ நான் எத்தனை முட்டாளாக இருந்துவிட்டேன்?

இன்ஸ்பெக்டர் : அம்மா, நீங்கள் வருத்தப்பட வேண்டாம். நீங்கள் இதில் சம்பந்தப்படவில்லை என்பதை நான் நன்ருக அறிவேன். மிஸ்டர் சதாசிவம் அவர்களைப் பற்றியும் நான் தெரிந்துகொண்டிருக்கிறேன். அவரைப்போல நல்லவர் இருப்பது அருமை என்று பலபேர் சொல்லியிருக்கிருர்கள். அதனுல் உங்களை இதில் சம்பந்தப்படுத்தாமல், தாமோதரனைக் கைது செய்யவே எண்ணியிருக்கிறேன். அதற்குத்தான் வழி காண வேண்டும்.

லலிதா : அவன் அயோக்கியன் என்று எனக்குத் தெரிந்ததும் அவனை இப்பொழுதே வந்து அந்தப் பெட்டிகளை யெல்லாம் எடுத்துக்கொண்டு போய் விடும்படி சொல்லியிருக்கிறேன். அவன் இங்கே சற்று நேரத்தில் வருவான்.

இன்ஸ்பெக்டர் : வருவானென்று என்ன நிச்சயம்?

லலிதா : வராவிட்டால் போலீசில் பெட்டிகளை ஒப்பு விப்பேனென்று சொன்னேன். அதைக் கேட்டு அவன் கொஞ்சம் பயந்து போனுன். அதன் காரணம் இப்பொழுதுதான் எனக்குத் தெரிகிறது.

இன்ஸ்பெக்டர் : போலீசைப்பற்றிச் சொன்னீர்களா ? அப்போ அவன் நிச்சயமாக வருவான். அவன் வந்து பெட்டிகளை எடுத்துக்கொண்டு போகும்போது நான் அவனை வீதியிலே கைது செய்து கொள்கிறேன். நீங்கள் கவலைப்படாதீர்கள்.

சதாசிவம் : அப்படி ஏதாவது வேண்டுமானுலும் நான் பொறுப்பேற்றுக்கொள்ளுகிறேன். என் மனைவி...

இன்ஸ்பெக்டர் : மிஸ்டர் சதாசிவம், நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் போய் வருகிறேன். உங்களுக்கு யாதொரு தொந்தரவும் வராது.

[போகிறான், பானுமதி நுழைகிறாள்.]

சதாசிவம் : யார், பானுமதியா, வாம்மா? ஏது இந் நேரத்தில் இப்படி அவசரமாக வருகிறாய்?

பானுமதி : லலிதாதான் அவசரமாகக் காரை அனுப்பி யிருந்தாள். ஆமாம், எதுக்கு இன்ஸ்பெக்டர் வந்து விட்டுப் போகிறார்?

லலிதா : எல்லாம் நான் செய்த குற்றம்தான் பானு. உன் அண்ணாவைப்பற்றிச் சரியாக அறிந்து கொள்ளாத பாவி நான்.

[விம்முகிறாள்.]

சதாசிவம் : இப்பத்தான் நன்றாகத் தெரிந்துகொண் டாயே. இனி எதற்கு வருத்தப்படுகிறாய்?

பானுமதி : என்னண்ணா? எனக்கு ஒன்றும் புரியவில்லையே?

சதாசிவம் : இனிமேல் ஒன்றும் புரியவே வேண்டியதில்லை. பானு, வா, அப்புறம் சாவகாசமாகப் பேசுவோம். இந்த நாடகம் முடிகிறதுக்கு இன்னும் கொஞ்ச நேரம் ஆகும். அப்புறம் தமாஷாகப் பேசுவோம். அதோ......கார் வந்து நிற்கிற சப்தமும் கேட்கிறது. பானு, இப்படி வா—நாம் இரண்டு பேரும் அந்தப் பக்கமாகக் கொஞ்ச நேரம் போவோம்.

[இருவரும் உள் அறைக்குச் செல்கிறார்கள். தாமோ தரன் உள்ளே நுழைகிறான் ]

[ திரை ]

## தோற்றம்

**சுப்பிரமணியம்** — *இளந்துறவி*

**ராமநாதன்** — *அவன் நண்பன்*

**லக்ஷ்மி** — *பன்னிரண்டு வயதுப் பெண்*

**கமலா** — *அவள் அக்காள்*

# இளந் துறவி

## முதல் அங்கம்

### காட்சி ஒன்று

*[புகழ் பெற்ற சிவஸ்தலமாகிய பேரூரிலே ஒரு சத்தி ரத்தில் ஒரு சாதாரணமான அறை. சுப்பிர மணியம் துறவியைப் போல உடை அணிந்து புலித்தோல்மேல் அமர்ந்திருக்கிறான். அவனுக்கு வயது இருபத்துநான்கிருக்கும். அவனுடன் அவனுடைய நண்பன் ராமநாதன் வார்த்தை யாடிக் கொண்டிருக்கிறான். மாலை ஏழு மணி இருக்கும்.]*

ராமநாதன் : என்ன சுப்பிரமணியம் — உனக்கு இந்தப் பேரூரே நிலையான வாசஸ்தலமாகி விட்டது போலிருக்கிறது?

சுப்பிரமணியன் : எனக்கு நிலையான வாசஸ்தலம் ஏது? உலகமெல்லாம் எனக்கு வாசஸ்தலம்தான்.

ராம : இங்கே வந்து இரண்டு மாதம் இருக்குமல்லவா?

சுப்பிர : அதனால் இது நிலையாகிவிடுமா?

ராம : நான் அப்படிச் சொல்லவில்லை... ஒரு மாதத்திற்கு மேல் எங்கும் தங்கமாட்டேன் என்று சொல்லு வாயே...அந்த வாக்கு...?

சுப்பிர : பொதுவாக நான் எங்கும் ஒரு மாதத்திற்கு மேல் தங்குவதில்லைதான். ஆனுல் தங்கவே கூடாது என்ற நியதி இல்லையே?

ராம : நியதியோ என்னவோ எனக்கென்ன தெரியும்? ஒரு மாதத்திற்கு மேல் தங்கினுல் ஒரு சிலருடனுவது பழக்கம் ஏற்படும். அதுவே பற்றுக்குக் காரணம் ஆகும். அதுஉன்னுடைய துறவறத்திற்கு ஏற்றதல்ல என்று நீயே சொல்லுவாயே, அதனுல் கேட்டேன். அதிருக்கட்டும்...சற்று முன்புவந்திருந்தாளே அந்தப் பெண் யார்?

சுப்பிர : யாரோ? எனக்குத் தெரியாது—நான் தெரிந்து கொள்ளவும் விரும்பவில்லை. ஒரு நாள் இந்தப் பக்கம் என்னவோ பாடிக்கொண்டே வந்தாள். குரல் நன்முக இருந்தது. அவளுக்கு சன்மார்க்க மான பாட்டுக்கள் சில சொல்லிக் கொடுக்கலா மென்று நினைத்தேன். அதுமுதல் தினமும் வருகிருள்? பெயர் லக்ஷ்மி என்று சொன்னுள்.

ராம : நன்முகப் பாடுகிருள். இத்தனைக்கும் சிறு பெண் தான். வயது பன்னிரண்டு இருக்குமா?

சுப்பிர : இருக்கலாம். பார்த்தால் இன்னும் குழந்தை மாதிரி இருக்கிருள்.

ராம : உலகத்தையே வெறுத்துத் துறவு பூண்டவருக்குப் பாட்டெல்லாம் எதற்கு?

சுப்பிர : அந்தப் பெண்ணுக்கு அழகான சாரீரம் இருக் கிறது. வெறும் சினிமாப் பாட்டுப் பாடிக்கொண் டிருப்பதைவிட இறைவன் மேலே நல்ல பாட்டுக்களை பாடட்டுமே என்றுதான் சொல்லிக் கொடுத்தேன்.

ராம : இன்னும் உன்னுடைய சங்கீதத்தைத் துறந்துவிடவில்லையோ?

சுப்பிர : அதை விட்டுவிட முடியுமா? அதுதான் என்னுடைய உயிர் மூச்சு.

ராம (சிரித்துக் கொண்டே) : அதை உன்னோடு வைத்துக் கொள்வதுதானே? உன்னுடைய உயிர் மூச்சு எல்லோர் மேலும் படவேண்டுமா என்ன?

சுப்பிர : நான் எங்கே போனாலும் அங்கு யாருக்காவது இரண்டு பாட்டாவது கற்றுக்கொடுக்காமல் இருக்கப் போவதில்லை.

ராம (கேலியாக) : அதுவும் இந்த மாதிரி அழகான பெண்கள் உன்னைத் தேடி வரும்போது...

சுப்பிர : நீ இப்படியெல்லாம் பேசக்கூடாது ராமநாதா. நான் ஏன் துறவறம் பூண்டேன் என்பது உனக்குத் தெரியாதா என்ன?

ராம : எனக்குத் தெரிந்ததனால்தான் சொல்லுகிறேன். நீ சாஸ்திரங்கள் எல்லாம் படித்திருக்கிறாய். நல்ல அனுஷ்டானங்களை யெல்லாம் கைக் கொண்டிருக்கிறாய். ஆனால்..

சுப்பிர : ஆனால் என்ன—நீ சொன்னவை மட்டும் காரணமல்ல. துறவு பூண்டதற்கு வேண்டிய உளப்பக்குவம் எனக்கு முன்பே இருந்திருக்கிறது.

ராம : என்னமோ உன்னுடைய நண்பன் என்கிற முறையில் சொல்லுகிறேன். இவ்வளவு சிறுவயதில் துறவு கொள்வதென்பது என்னால் நினைக்க முடியவில்லை.

சுப்பிர : ஏன், சிறு வயதிலேயே துறவு பூண்டவர்கள் உலகத்தில் இல்லையா?

ராம : போதும் போதும். இனி விவேகானந்தரைப் பற்றியும் மற்றவர்களைப் பற்றியும் பிரசங்கம் ஆரம்பித்து விடுவாய். கேட்டுக் கேட்டு சலித்துவிட்டதே.

சுப்பிர : பின் ஏன் மறுபடியும் இதே பேச்சைக் கிளப்புகிறாய்?

ராம : சுப்பிரமணியம், உன்னோடு வாதாட என்னால் முடியாது. ஏதோ உன்மேல் உள்ள பிரியத்தினாலே...

சுப்பிர : பிரியத்தினாலேதான் நான் எங்கு போனாலும் அங்கே வந்து தொந்தரவு கொடுக்கிறாய்.

ராம : அப்படியானால் நான் வராமல் இருந்துவிடுகிறேன்.

சுப்பிர (தணிந்த குரலில்) : ராமநாதா, உன்னை வர வேண்டாமென்று சொல்வேனா, இந்த உலகத்திலே எனக்கு இரண்டு பற்றுக்கள்தான் உண்டு. ஒன்று நீ மற்றொன்று சங்கீதம்.

ராம : இன்னுமொன்று இருக்கிறதே.

சுப்பிர : இல்லவே இல்லை.

ராம : அந்தச் சிறு பெண்?

சுப்பிர (சிரிப்புடன்) : லக்ஷ்மியா, போடா அசடு. அவளிடம் எனக்குப் பற்றுதல் ஒன்றும் கிடையாது. அவளுக்குப் நல்ல பாட்டுச் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்று நினைத்தேன். அவ்வளவுதான்.

ராம : சரி, உன்னுடைய பாடல்கள் ஏதாவது சொல்லிக் கொடுத்திருக்கிறாயா? அதைக் கொஞ்சம் பாடு கேட்கிறேன். லக்ஷ்மிக்குக் கிடைத்த பாக்யம் எனக்கும் கிடைக்கட்டும்.

சுப்பிர (பாட்டு):

பல்லவி

ஆசை யற்றவன் அல்லலற்றவன்
பாசமுற்றவன் படர்கள் உற்றவன் (ஆசை)

அனுபல்லவி

வீசுங் கண்ணிலும் விளையும் மண்ணிலும்
பேசும் போன்னிலும் பெருமை வாழ்விலும் (ஆசை)

சரணம்

வேணு மென்றவன் வீசமும் பெருன்
வீசுவோன் அடி வீழும் லோகமே
வேணு கானன்வில் விசயனுக் கெனக்
காணுங் கீதையின் கருத்தை யெண்ணியே (ஆசை)

ராம: புதிய பாட்டுப் போலிருக்கிறதே. ரொம்ப நன்ருக இருக்கிறது. உயர்ந்த கருத்து, கீதையின் கருத்தையெல்லாம் அதில் கொண்டு வந்து விட்டாயே—அது பிரமாதம்.

சுப்பிர: போதும் போதும்—உன்னுடைய புகழ்ச்சி யெல்லாம் தேவையில்லை.

ராம: இங்கு வந்த பிறகு வேறு ஏதாவது புதிய பாட்டு இயற்றியிருக்கிருயா?

சுப்பிர: கோயிலுக்குப் போக நேரமாகிவிட்டது. வா, போவோம். புதிய பாட்டுக்களை நாளை காலையில் பாடுகிறேன்.

ராம: சரி, உன்னிஷ்டப்படியே செய். ஆனுல் தயவு செய்து என்னைக் காலையிலே நாலு மணிக்கே எழுப்பித் தொந்திரவு பண்ணுதே.

சுப்பிர : அதிகாலையிலே எழுந்து சற்றுநேரம் உலாவி விட்டுப் பிறகு ஆற்று நீரில் குளிப்பதிலுள்ள இன்பம் உனக்கென்ன தெரியும்? சரி சரி, பூஜைக்கு நேரம் ஆகிவிட்டது. சீக்கிரம் புறப்படு.

[இருவரும் புறப்படுகிறார்கள்.]

## காட்சி இரண்டு

[இரவு எட்டு மணி. பேரூரிலே சாதாரணமான ஒரு பழைய வீடு. ஓர் அறையிலே லக்ஷ்மியும் அவளுடைய அக்காள் கமலாவும் பாயிலே அமர்ந்திருக்கிறார்கள். கமலா ஒரு இள விதவை; வயது இருபது இருக்கலாம். கைம்மைக் கோலத்திலும் அவளுடைய அழகு பளிச்சென்று தெரிகிறது. பலவிதமான உணர்ச்சிகளால் ஏற்பட்ட கலக்கமும் அவள் முகத்திலே நிழலாடுகிறது.]

கமலா : லக்ஷ்மி, இன்றைக்கு அவர் என்ன பாட்டுச் சொல்லிக் கொடுத்தார்?

லக்ஷ்மி : எல்லா உயிர்களிடத்திலும் அன்பு செய்யவேணுமாம்; அதுதான் இன்பங் கொடுக்குமாம்—அப்படி ஒரு பாட்டு.

கமலா : அவரே எழுதியதா?

லக்ஷ்மி : ஆமாம்—அப்படித்தான் சொன்னார்—சிறுவயதிலேயே இப்படி நல்ல பாட்டெல்லாம் எழுதுகிறார். அவர் என்னென்னவோ நல்ல விஷயங்களையெல்லாம் வந்தவர்களுக்கெல்லாம் எடுத்துச் சொல்லுகிறார்—உலகத்திலே அவருக்கு எந்த ஆசையுமே கிடையா

தென்று எல்லோரும் ஆச்சரியமாகப் பேசிக்கொள்ளு கிறார்கள்.

கமலா : சிறு வயதிலேயே எதற்கு சந்நியாசி ஆகி விட்டார்?

லக்ஷ்மி : அது எனக்கெப்படித் தெரியும் ? ரொம்பப் படிச்சவராம். வீடு வாசல் சொத்தெல்லாம் விட்டு விட்டுப் புறப்பட்டு வந்துவிட்டாரென்று பேசிக் கொண்டார்கள்.

கமலா : அந்த விஷயமெல்லாம் இவர்களுக்கு எப்படித் தெரிந்தது ?

லக்ஷ்மி : அது எப்படியோ—எல்லோரும் பேசுவதைத் தான் நான் கேட்டேன். கலியாணம் வேண்டவே வேண்டாம், அது உலக மாயையிலே தள்ளிவிடும் என்று ஓடி வந்துவிட்டாராம்.

கமலா : யாரடி பார்த்தது ? எல்லாம் வெறுங் கற்பனை யாக இருக்கும்.

லக்ஷ்மி : அம்மணிப் பாட்டிதான் சொன்னாள். அந்தப் பாட்டி பேசரதைக் கேட்டால் நிஜமென்றுதான் நம்பவேணும். அவரைப் பார்த்தாலும் அப்படித் தான் இருக்கிறார்.

கமலா . எங்கே அந்தப் பாட்டைப் பாடு.

லக்ஷ்மி (பாட்டு) :

பல்லவி

எவ்வுயிர்க்கும் அன்பு செய்வாய்—உலகில்
இன்பம் அதுவே தெரிவாய் மனமே (எவ்)

அனுபல்லவி

ஔவைமுதல் அறிஞ ரெல்லாம் ஆய்ந்தறிந்து
சொன்ன மொழி
இவ்வுடலை எடுத்தபயன் எய்திடவே நல்லவழி (எவ்)

சரணம்

எங்கும் நிறைந்துள்ளவனும் ஈசனுறை கோயில்களாம்
யாவருக்கும் சேவை செய்தால் இறைவனருள் தந்திடுவார்
பங்கமிலா வாழ்வு கண்டாய் பாரில்பிறர் சேவையதே
பரிவுடனே பணிகள் செய்வாய் வாழும்வகை யதுமனமே
(எவ்)

கமலா: கருத்து ரொம்ப நன்ருக இருக்கிறது.

லக்ஷ்மி: அவரே பாடும்போது இன்னும் நன்ருக இருக்கும். பாடப் பாட அவர் கண்களிலே அப்படியே தாரை தாரையாய்க் கண்ணீர் பெருகும்.

கமலா: அப்பாவிடம் சொல்லி அவரை நம் வீட்டிற்கு ஒருநாள் அழைத்து வந்தால் என்ன ?

லக்ஷ்மி: எனக்கும் ஆசையாகத்தான் இருக்கிறது. அப்பா வந்த பிறகு கேட்டுப் பார்.

கமலா: லக்ஷ்மி, வா அப்பா வருகின்ற நேரமாகிறது. அவர் போய் ஒரு வாரமாய் விட்டது. இன்றைக்கு வருவதாகக் கடிதம் எழுதியிருக்கிருர்.

லக்ஷ்மி: அப்படி அப்பாவுக்கு என்ன அடிக்கடி வெளி யூரிலே வேலை ?

கமலா: எல்லாம் நம் ரண்டுபேருக்கும் சோறு போடத் தான் பாவம், அவர் அலைகிருர். அம்மாள் இருந்தா லாவது நம்மைப்பற்றிய கவலை அவருக்கு அதிகமாக

இராது. வெளியூர் போய்விட்டுத் திரும்பிவந்து நம்மை பார்க்கும் வரையிலும் அவருக்கு நிம்மதி ஏது ?

லக்ஷ்மி : அப்படி என்னக்கா பயம் ? நீதான் எனக்குத் துணையாக இருக்கிறுயே ?

கமலா : நான் உனக்குத் துணை ; எனக்கு யார் துணை ?

லக்ஷ்மி : பேரூர்ப் பட்டீசுவரர்தான் துணை யென்று அப்பா அடிக்கடி சொல்லுவார்.

கமலா : எனக்கு யாருமே துணையில்லை லக்ஷ்மி. வா, போய் அடுப்பைக் கவனிக்கலாம். அப்பாவுக்கு வெந்நீர் போட்டு வைக்கவேணும். காலையிலிருந்து குளித்திருப்பாரோ என்னவோ !

*[எழுந்து உள் அறையை நோக்கிச் செல்கிறுர்கள்.]*

## காட்சி மூன்று

*[அதிகாலை—இளந்துறவி சுப்பிரமணியம் தங்கியுள்ள சத்திரத்தின் அறை. சுப்பிரமணியம் உறங்குகின்ற ராமநாதனை எழுப்புகிறுன்.]*

சுப்பிர : ராமநாதா, எழுந்திரு, மணி ஐந்தாகிவிட்டது. இன்னும் என்னடா தூக்கம் ?

ராம (தூக்கத்தோடு): குளிர், இங்கே ரொம்ப அதிகம், எப்படித் தண்ணீரில் குளிக்கிறது இந்த நேரத்திலே ?

சுப்பிர : முதலில் எழுந்திரு, பிறகு எப்படி என்று சொல்லுகிறேன்.

ராம: அப்பப்பா, இந்தத் துறவிகளோடு வாழ்வதே சிரமம். இன்றைக்கே புறப்பட்டுப் போய்விடப் போகிறேன்.

சுப்பிர: முதலில் குளித்துக் காப்பி சாப்பிடு. பிறகு போகிற விஷயம் யோசிப்போம்.

ராம: ஏண்டா, எல்லாவற்றையும் துறந்து விட்டேன் என்கிருயே, இந்தக் குளிப்பதை ஒரு நாளைக்குத் துறக்க முடியாதா? இந்த ஊரிலே ஒரே குளிர். சுடச் சுட காப்பியிருந்தால் வாய் கொப்பளிப்பதையெல் லாம் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்.

சுப்பிர (சிரித்துக்கொண்டே): குளிப்பதைத் துறந்து விட்லாம், காப்பியைமட்டும் துறக்க முடியாதோ? டேய், எழுந்திரு நேரமாகிறது.

ராம: இன்னும் இருட்டாகத்தானே இருக்கிறது. நன்ருக விடியட்டுமே?

சுப்பிர: இப்பொழுதே புறப்பட்டால்தான் கோயிலிலே விஸ்வரூப தரிசனத்திற்கு வந்து சேரலாம்.

ராம (எழுந்து உட்கார்ந்துகொண்டு): ஆறு எத்தனை தூரம்?

சுப்பிர: அதிக தூரமில்லை. கால் மணியிலே போய் விடலாம். எழுந்திரு.

ராம: தினமும் இவ்வளவு நேரத்திலேயே போவாயா? எந்த வீதி வழியாகப் போவாய்?

சுப்பிர: எந்த வீதியென்ருல் உனக்கென்ன?

ராம: இல்லே ஒரே வீதியில் தினம் போனுல் அதிலே பற்றுதல் ஏற்பட்டுவிடாதோ என்று கேட்டேன்.

சுப்பிர: டேய், இப்படியே பேசி காப்பிகிடைக்கிற நேரம் பார்க்கிருயா ? எழுந்து புறப்படடா. இன்றைக்கு ஒரு புதிய வீதி வழியாக உன்னைக் கூட்டிச் செல்லுகிறேன்.

ராம (எழுந்து சோம்பல் முறித்துக்கொண்டே) : சரி, என்ன சொன்னாலும் நீ விட்டபாடில்லை. ஏண்டா, ஆற்றங்கரையிலேயே நல்ல காப்பி கிடைக்குமா ?

சுப்பிர : உனக்குத் தெரியாதா, இங்கே ஆற்றிலே காப்பி தான் சூடாக வருகிறது. முழுகி வேண்டிய மட்டும் குடிக்கலாம் வா.

ராம : அடடே, துறவியாகியும் இன்னும் கொஞ்சங் கொஞ்சம் ஹாஸ்யம் இருக்கிறதே. துறவிக்கு அதெல்லாம் கூடாதப்பா. வேடிக்கையாகப் பேசுகிறவனைக் கண்டால் யாரும் காலில் விழ மாட்டார்கள். யாருக்கும் புரியாதவாறு வேதாந்தம் பேசவேணும். அதுதான் உனது வேஷத்திற்கு அழகு!

சுப்பிர : குருநாதா, இனிமேல் அப்படியே செய்கிறேன், இப்பொழுது புறப்படுங்கள்.

[சிரித்துக்கொண்டே இருவரும் புறப்படுகிருர்கள்.]

## காட்சி நான்கு

[பேரூரிலே ஒரு வீதி. வெளிச்சம் நன்கு வராத காலை நேரம். சுப்பிரமணியமும் ராமநாதனும் பேசிக் கொண்டே செல்கிருர்கள்.]

ராம : ஆறு எந்தப் பக்கம் ?

சுப்பிர : வா, இப்படியே இந்த வீதியில் நடப்போம். இப்படித்தான் போகவேணும். இந்த வீதி வழியாக

நான் இதுவரை சென்றதேயில்லை. ஆனால், எந்த வீதியில் போனாலும் ஆற்றுக்குப் போய்ச் சேரலாம். நீ சொன்னது போலவே புதிய வீதியிலே இன்றைக்குப் போகலாம்.

ராம : சுப்ரமணியம், ஒரு விஷயம் சொல்லுகிறேன், கோபித்துக்கொள்ளாதே. இது வேடிக்கையல்ல, முக்கியமான விஷயம். உன்னோடு ஒருநாள் முழுதும் இருந்தேனே ஒன்றும் வித்யாசமே தெரியவில்லையே?

சுப்பிர : என்ன வித்தியாசம் ? நாம் இரண்டு பேரும் பால்ய சிநேகிதர்கள். விளையாடுவோம். சண்டை போடுவோம்; பிறகு சேர்ந்து கொள்வோம். இதிலே என்ன வித்தியாசம் ?

ராம : நான் அதைச் சொல்லவில்லை. துறவியாகி விட்டாயே மாறுதல் ஒன்றும் காணோமே, பழைய படிதானே இருக்கிறாய் ?

சுப்பிர : பழையபடி இருக்காமல் பிறகு என்ன மாறுதல் வேண்டுமென்கிறாய் ? காஷாயம் போட்டுக்கொண்டிருக்கிறேன் ; அது மாறுதல் இல்லையா?

ராம : காஷாயம் எல்லாம் நன்றாகத்தான் இருக்கிறது.

சுப்பிர : பின்னே என்ன வேணும் ? பெரிய சுவாமிகள் என்று தடபுடல் செய்ய வேணுமா ? ஆஷாடபூதி போல் நடிக்க வேணுமா ?

ராம : அதில்லை. எனக்கென்னவோ நீ பழைய சுப்பிரமணியமாகத்தான்......

[பாட்டு ஒலி லேசாகக் கேட்கிறது.]

சுப்பிர : சரிசரி, வளைத்து வளைத்து ஒரே விஷயத்தைப் பேச வராதே. பால்ய சிநேகனான உனக்கு வித்யாசம்

தெரியாவிட்டாலும் என்னுடைய உபதேசத்தைக் கேட்க வருகிறவர்களுக்கு வித்யாசம் நன்கு தெரிகிறது.

ராம : அவர்களுக்கு உன்னைப்பற்றியோ, உன்னுடைய பழைய வாழ்க்கையோ தெரியாதே.

சுப்பிர : தெரியாவிட்டால் பரவாயில்லை—உனக்கு என் புது வாழ்வு தெரியாது.

ராம (காது கொடுத்துக் கேட்டு) : உன் பாட்டை யாரோ பாடுவது போல இருக்கிறதே !

சுப்பிர : உஸ்...பேசாதே சொஞ்சம் நில்லு.

[உற்றுக் கேட்கிறான்.]

ராம : உன்னுடைய பாட்டுத்தான்—லக்ஷ்மியா பாடுவது?

சுப்பிர : உஸ்...சும்மா இரு...

[பாட்டுக் கேட்கிறது. பாடுபவள் கமலா.]

கமலா (பாட்டு) :

பல்லவி

வழிகாட்டுவாய்— அருட்பெருஞ்சோதி (வழி)

அனுபல்லவி

வழி அறியாமலே மயங்கினேன் அரசே
வாழ்க்கைச் சுழலில் பட்டு வருந்தினேன் ஐயா (வழி)

சரணம்

ஒளிமயமானதோர் அருள் நிலை நீயன்றோ
ஓங்கிருள் சூழநான் உழன்றிடல் நன்றோ
வளர்பெருங் கருணையே மாண்புயர் வள்ளலே
மனத்துயர் மாற்றிட வந்திடும் செல்வமே (வழி)

ராம (பாட்டு முடிந்த பிறகு): அடடா! என்ன சுகமான சாரீரம். பாட்டும் ரொம்ப நல்ல பாட்டு. பாடுகிற பெண்தானே லக்ஷ்மி ?

சுப்பிர (யோசனையோடு) : லக்ஷ்மியினுடைய குரல் இல்லையே இது.

ராம : லக்ஷ்மி குரல் அல்ல என்று எப்படி நிச்சயமாகத் தெரியும் ?

சுப்பிர : லக்ஷ்மியின் குரலைவிட இதில் குழைவும் கனிவும் அதிகம். யாரோ பாட்டின் பொருளை உணர்ந்து உள்ள நெகிழ்வோடல்லவா பாடுகிறார்கள் ?

ராம : இது யார் வீடு ?

சுப்பிர : எனக்கென்ன தெரியும்? ஒவ்வொரு வீடும் இன்னாருடையதென்று தெரிந்து கொள்வதுதான் என் வேலையா ?

ராம (சிரித்து) : ஓகோ...நீ துறவியல்லவா ! மறந்து போய்விட்டேன்.

சுப்பிர (பாட்டை முணுமுணுக்கிறான்) : வழிகாட்டுவாய் அருட்பெருஞ்சோதி...

ராம : நான் சொல்வது உன் காதில் படவில்லையா ?

சுப்பிர : ராமநாதா, ஆற்றில் இறங்கிப் பிறகு இந்தப் பாட்டைப் பாடுவது பொருத்தமாக இருக்கும்.

ராம : இங்கேகூட இந்த வீட்டுக்கு வழி தெரிந்தால் நன்றாகத்தான் இருக்கும். இதுவும் வீடுதானே ?

சுப்பிர : அந்தப் பெண் பாடியது எனக்கு ரொம்பப் பிடிக்கிறது.

ராம : யாராவது கொஞ்சம் நன்ருகப் பாடிவிட்டால் போதும், உனக்கு மனம் அங்கேயே இருக்கும்.

சுப்பிர : அந்த இசை என் உள்ளத்திலே இன்ப அலேயாக மிதந்துகொண்டிருக்கிறது. (தானே பாடுகிருன்). வழி காட்டுவாய்...(பல்லவி பாடி...ஸ்வரம் பாடு கிருன்...அதை நிறுத்தித் தனக்குள்ளேயே) அந்தப் பெண்ணிற்கு ஸ்வரம் பாடவும் சொல்லிக் கொடுத் தால் நன்ருக இருக்கும். (கோயில் மணியோசை—பாட்டை நிறுத்தி) ராமநாதா, காலே பூஜைக்கு நேரமாகிவிட்டது வா, சீக்கிரம். அவள் பாடிய பாட்டிலே உயிர் இருக்கிறது...

ராம : நாம் போவதற்குள் பூஜை முடிந்துவிடாதே ?

சுப்பிர : ஆமாம், இன்று பூஜைக்குப் போய்ச் சேர முடியாது போலிருக்கிறது. இதுவரை ஒருநாள்கூட நான் காலேப் பூஜைக்குத் தவறியதில்லே...பாட்டு நன்ருக இருக்கிறது.

ராம : பேரூர்க் கோயிலிலுள்ள சிற்பங்கள் மிக அழகாக இருக்குமாமே, பார்க்கலாமா ?

சுப்பிர : நீ வேண்டுமாஞல் பார்த்துவிட்டு வா...நான் லக்ஷ்மிக்குப் புதிய பாட்டு ஒன்று சொல்லிக் கொடுக்க வேண்டும். ஒரு நல்ல பாட்டு எழுதப் போகிறேன்.

ராம : அப்படியாஞல் நீ குளித்த பிறகு கோயிலுக்கு வரவில்லேயா ?

சுப்பிர : வருகிறேன். வந்து இறைவனுக்கு வணக்கம் செலுத்திவிட்டு உடனே சத்திரத்திற்குப் போகிறேன். நீ மெதுவாகச் சிற்பங்களேயெல்லாம்

பார்த்துவிட்டு வா. அந்தப் பெண் யாரென்று லக்ஷ்மியைக் கேட்கவேண்டும்.

ராம : ரயில் எத்தனை மணிக்கு ? நான் இன்றே புறப்பட வேண்டும்.

சுப்பிர : ரயிலுக்கு நேரம் இருக்கிறது. கோயிலுக்குப் போகும்போது ரயிலை நினைத்துக்கொண்டிருக்காதே. (முணுமுணுக்கிறான்)...வழி காட்டுவாய்...ஆஹா! எவ்வளவு நன்றாகப் பாடினாள்.

ராம : எனக்கு ஆற்றுக்குப் போக இப்பொழுது வழி காட்டுவாய்.

[போகிறார்கள்.]

## காட்சி ஐந்து

[சத்திரத்தில் இளந்துறவி உள்ள அறை. லக்ஷ்மி தட்டை ஏந்தி நிற்கிறாள். மாலை நேரம்.]

சுப்பிர : லக்ஷ்மி, தட்டிலே என்ன கொண்டுவந்திருக்கிறாய் ?

லக்ஷ்மி : பட்சணம் கொண்டு வந்திருக்கிறேன்.

சுப்பிர : யாருக்கு ?

லக்ஷ்மி : தங்களுக்குத்தான்.

சுப்பிர : எனக்கா பட்சணம் ? உன்னை யார் கொண்டு வரச் சொன்னார்கள் ? எடுத்துக்கொண்டு போய்விடு.

லக்ஷ்மி : இவ்வளவு சிரமப்பட்டு எனக்குத் தினமும் பாட்டுச் சொல்லிக் கொடுக்கிறீர்கள். ஏதோ

கொஞ்சம் பட்சணம் ஒரு நாளேக்குச் சாப்பிடக் கூடாதா ? எங்களுடைய ஆசையை...

சுப்பிர : நான் யார் வீட்டிலும் சாப்பிடுவது கிடையாது லக்ஷ்மி.

லக்ஷ்மி : அப்பா வந்து தங்களே அழைத்த போதும் யார் வீட்டிற்கும் வருவதில்லே என்று சொல்லிவிட்டீர்கள். பட்சணம்கூட சாப்பிடக்கூடாதா ?

சுப்பிர : லக்ஷ்மி, யார் வீட்டிலும் சாப்பிடுவதில்லே என்று விரதம் கொண்டிருக்கிறேன்.

லக்ஷ்மி : கோபித்துக்கொள்ளக் கூடாது. அது எங்களுக்குத் தெரியாது.

சுப்பிர : பட்சணம் சாப்பிடு, வீட்டுக்கு வா என்றெல்லாம் யாரும் என்னிடம் பேசவே கூடாது. மறுபடியும் இப்படிக் கூறுவயாளுல் நீ இங்கே வர வேண்டாம். பாட்டும் சொல்லித் தரமாட்டேன்.

லக்ஷ்மி : இதில் ஒன்றும் தவறில்லேயென்றுதான் அக்கா கொடுத்தனுப்பிஞள். உங்களுக்கு இஷ்டமில்லே யென்ருல் இனிமேல் கொண்டுவரவில்லே.

சுப்பிர : நான் உலகத்தையே துறந்தவன். எனக்கு யார் வீட்டுக்காவது போகவோ, யார் வீட்டிலாவது உண்ணவோ இஷ்டம் கிடையாது. எனது விரதத்திற்கு அது விரோதம். நீ சிறுபெண். இதெல்லாம் உனக்குத் தெரியாது.

லக்ஷ்மி : தாங்கள் சந்தோஷப்படுவீர்களென்று அக்கா கொடுத்தனுப்பிஞள். இனிமேல் இப்படிக் கொண்டு வரமாட்டேன். மன்னிக்கவேணும்.

சுப்பிர : சரி லக்ஷ்மி, அந்தப் புதியப் பாட்டுப் பாடமாகி விட்டதா ?

லக்ஷ்மி : பாடம் செய்துவிட்டேனே.

சுப்பிர : எங்கே பாடு பார்க்கலாம். இப்படி உட்கார்ந்து பாடு.

லக்ஷ்மி (அமர்ந்து பாடுகிருள்) :

பல்லவி

உண்மை தவருதே—அதில்
ஊக்கம் குறையாதே (உண்மை)

அனுபல்லவி

கண்ணையிமைபோல—வாய்மை
காப்பதுனக் கழகாம்
பெண்ணையும் விற்றடிமை—செய்தே
பேணின நல்லறமாம் (உண்மை)

சரணம்

துன்பம் தொடர்ந்தாலும்—தாங்கொணுச்
சோதனை சூழ்ந்தாலும்
இன்பம் மறைந்தாலும்—இகழ்ச்சியோ
டேளனம் சேர்ந்தாலும் (உண்மை)

2

உண்மை கடைப்பிடிக்கும்—வாழ்வே
உன்னத வாழ்வாகும்
திண்மையும் ஆண்மையுமாய்—உயிர்தான்
தேயினும் காத்திடுவாய் (உண்மை)

சுப்பிர : நன்ருகப் பாடம் செய்திருக்கிருய். நாளைக்குப் புதியப் பாட்டுச் சொல்லித் தருகிறேன். இப்பொழுது

இந்தப் பட்சணத்தையெல்லாம் எடுத்துக்கொண்டு வீட்டுக்குப் போ. நான் சொன்னதை ஞாபகத்தில் வைத்துக்கொள்.

லக்ஷ்மி : மறக்கவே மாட்டேன், சுவாமி. இன்றைக்குத் தெரியாமல் தப்பிப் போய்விட்டது.

[தட்டை எடுத்துக்கொண்டு புறப்படுகிருள் ]

## காட்சி ஆறு

[சத்திரத்தின் முன் வாசல். சுப்பிரமணியம் தாழ்வாரத்தில் நின்றுகொண்டிருக்க ராமநாதன் எதிரே வருகிறுன். காலை நேரம்.]

சுப்பிர : வா, ராமநாதா. உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன், ஏன் இவ்வளவு நேரம்?

ராம : கோயம்புத்தூரிலேயே காப்பி சாப்பிட்டுவிட்டு வந்தேன். அதனுல் நேரமாகிவிட்டது.

சுப்பிர : ஏன் பேரூர்க் காப்பி பிடிக்கவில்லையா ?

ராம : காப்பி மட்டுமல்ல. காலையிலே அந்த ஆற்றில் போன தடவை குளித்ததே போதும்.

சுப்பிர : அடடே அதுவா விஷயம் ? உனக்குப் புண்ய தீர்த்தம் கொடுத்து வைக்கவில்லை.

ராம : சுப்பிரமணியம், அந்தப் பெண் யாரென்று விசாரித்தாயா ? இதற்குள்ளே தெரியாமலா இருக்கும்?

சுப்பிர : எந்தப் பெண்ணடா? எப்பொழுது பார்த்தாலும் உனக்கு இந்தப் பேச்சுத்தானு? வந்தவுடனே ஆரம்பித்துவிட்டாய்.

ராம : அப்பா, சள்ளென்று விழுகிருயே? நான் உன்னைக் கலியாணம் செய்து கொள்ளச் சொல்லவில்லையே. போன தடவை இங்கே நான் வந்திருந்த போது காலையிலே ஆற்றுக்குப் போனேமே அப்போ யாரோ ஒரு பெண் உன்னுடைய பாட்டைப் பாடிக்கொண்டிருந்தாளே அவளைப் பற்றித்தான் கேட்கிறேன்.

சுப்பிர : அவள் பாடுவது மிக இனிமையாக இருக்கிறதல்லவா?

ராம : அதனுல்தான் கேட்டேன்.

சுப்பிர : இப்பொழுதெல்லாம் ஆற்றுக்கு அந்த வீதி வழியாகவே போகிறேன். தினமும் அவள் பாட்டுக் கேட்கிறது.

ராம ; அவளை நீ பார்த்திருக்கிருயா?

சுப்பிர : இல்லை, பார்த்ததேயில்லை. அவள் வெளியே தலை நீட்டுவதாகவே காணேம்.

ராம : அவள் பெயராவது தெரியுமா?

சுப்பிர : அதுவும் தெரியாது.

ராம : சரிசரி, துறவிக்கு அதெல்லாம் எதற்கு என்று நினைத்திருப்பாய்.

சுப்பிர : இல்லை—எனக்குக்கூடத் தெரிந்துகொள்ளலாமென்ற இஷ்டந்தான், ஆனுல் யாரிடம் கேட்பது?

ராம : ஏன், லக்ஷ்மியைக் கேட்டால் சொல்லுகிருள். அவள் மூலந்தானே உன்னுடைய பாட்டுக்களை அவள் கற்றுக்கொண்டிருக்க வேண்டும்?

சுப்பிர : லக்ஷ்மியிடம் நான் எதையுமே கேட்பதில்லை என்று விரதம் வைத்துக்கொண்டிருக்கிறேன்.

ராம : ஏனே?

சுப்பிர : உலக விஷயமெல்லாம் எனக்கு எதற்கு என்று தான். மேலும் லக்ஷ்மி ஏதாவது தப்பாக...

ராம : பெயரைக் கேட்டால்கூட ஆகாதோ? பிறகு எதற்காகத் தினமும் அவள் பாடுவதைக் கேட்டுக் கொண்டிருக்கிருய்? அந்த வீதி வழியாக எதற்குப் போகிருய்?

சுப்பிர : பாட்டைக் கேட்பதில் என்ன தவறு?

ராம : பெயரைக் கேட்டால் என்ன வந்து விட்டதாம்?

சுப்பிர : என்னமோ என் பாட்டுகள் அல்லவா? அதுவும் அவள் பாடும் முறை என்னைக் கவர்ந்திருக்கிறது. என்ஞல் அவள் பாடுவதைக் கேட்காமலிருக்க முடியவில்லை. இதில் என்ன தப்பு?

ராம : லக்ஷ்மி தினமும் வருகிருளா?

சுப்பிர : ஏன் தினமும் வராமலென்ன? இதோ இன்னும் சற்று நேரத்தில் வந்துவிடுவாள்; வா உள்ளே போவோம்.

ராம : நான் இருந்தால் இடைஞ்சலாக இருக்குமே?

[உள்ளே போகிருர்கள்.]

# காட்சி ஏழு

*[சத்திரத்தில் சுப்பிரமணியம் தங்கியுள்ள அறை. சுப்பிரமணியமும் லக்ஷ்மியும் வீற்றிருக்கிறார்கள். காலை நேரம்.]*

லக்ஷ்மி : இப்போ இங்கிருந்து வெளியே போனாரே அந்த மாமா யார்?

சுப்பிர : ராமநாதனா? என் நண்பன்.

லக்ஷ்மி : முன்னால்கூட வந்திருந்தாரே?

சுப்பிர : ஆமாம், நானும் அவனும் சிறுவயதுமுதல் இணைபிரியா நண்பர்கள்; நான் இருக்கிற இடத்தைத் தேடிப் பிடித்துக்கொண்டு மாதத்திற்கு ஒரு முறை யாவது வராமல் இருக்க மாட்டான்.

லக்ஷ்மி : அவரையெல்லாம் பிரிந்து எப்படி நீங்கள் இருக்கிறீர்கள்?

சுப்பிர : அதிருக்கட்டும்...லக்ஷ்மி, நீ ஒரு கேள்வி கேட்டாய். நான் ஒன்று கேட்கட்டுமா?

லக்ஷ்மி என்ன இது, இதற்கெல்லாம் என்னை அனுமதி கேட்க வேண்டுமா நீங்கள்?

சுப்பிர : அதிகாலையிலே நீ பாடுவதுண்டா?

லக்ஷ்மி : இல்லையே... அத்தனை நேரத்தில் என்னால் எழுந்திருக்கவே முடியாது.

சுப்பிர : உனக்கு நான் சொல்லிக் கொடுத்த பாட்டுக்களை தினமும் யாரோ பாடுகிறார்களே?

லக்ஷ்மி : என் அக்காதான் பாடுகிருள்.

சுப்பிர (ஆச்சரியத்துடன்) : உன் அக்காவா? என்னுடைய பாட்டை அவளா...?

லக்ஷ்மி : ஆமாம், என் அக்காதான் பாடுகிருள். நான் பாடுவதைக் கேட்டு அவள் கற்றுக்கொண்டிருக்கிருள்.

சுப்பிர : உங்கள் வீடுதானு அது?

லக்ஷ்மி: ஏன். அதுதான் எங்கள் வீடு, நானும் அக்காவும் அப்பாவும் குடியிருக்கிருேம். நீங்கள் தினமும் காலையிலே எங்கள் வீதி வழியாகத்தானே போகிறீர்கள்?

சுப்பிர : உன் அக்காவா பாடுவது? மிக அற்புதமாக இருக்கிறது.

லக்ஷ்மி : எங்கள் வீட்டுக்கு வரும்படி வேண்டினேம்; நீங்கள்தான் அந்தப் பேச்சே எடுக்கக்கூடாது என்று உத்திரவு போட்டுவிட்டீர்களே.

சுப்பிர (தடுமாற்றத்தோடு) : அதற்கென்ன ஒரு சமயம் வந்தால் போகிறது.

லக்ஷ்மி : நான் இனிமேல் உங்களை வரும்படி கேட்கவே மாட்டேன். பிறகு என்மீது கோபம் கொள்வீர்கள்.

சுப்பிர : இல்லை, இல்லை. கோபம் என்ன இருக்கிறது? உன் அக்கா பெயர் என்ன லக்ஷ்மி?

லக்ஷ்மி : அவள் பேர் கமலா?

சுப்பிர : கமலா வெளியிலேயே வருவதில்லையா?

லக்ஷ்மி : அவள் வெளியிலே வரமாட்டாள். வீட்டை விட்டு எங்குமே போக மாட்டாள். நீங்கள் வீதியில் வருகிறபோது பாடிக்கொண்டே மறைவிலிருந்து பார்ப்பாள். உங்கள்மீது அவளுக்கு ரொம்ப பக்தி. உங்களைப் பற்றிச் சொன்னால் கையெடுத்துக் கும்பிடுவாள்.

சுப்பிர : உங்கள் வீட்டிலே யார் யார் இருக்கிறதாகச் சொன்னாய்?

லக்ஷ்மி : நானும் அக்காளும், அப்பாவுந்தான். அம்மா இறந்துபோய் ரொம்ப வருஷம் ஆகிறது. இன்றைக்கு நான் சீக்கிரமாகப் போகவேணும்.

சுப்பிர : ஒ, பேச்சிலே மறந்துவிட்டேனா? நான் முதலிலே பாடுகிறேன். பிறகு நீயும் சேர்ந்து பாடலாம்... இந்தப் பாட்டையும் கமலா பாடுவாளா?

லக்ஷ்மி : நிச்சயம் பாடுவாள். உங்கள் பாட்டைப் பொருள் தெரிந்து அவள்தான் பாடுவாள்.

சுப்பிர : பாட்டிலே அவளுக்கு அவ்வளவு ஆசையா?

லக்ஷ்மி : முன்னெல்லாம் அவள் பாடுவதையே நிறுத்தி விட்டாள். உங்கள் பாட்டைக் கேட்ட பிறகுதான் அவள் மறுபடியும் அத்தனை ஆசையோடு பாடுகிறாள்.

சுப்பிர : அவளே இங்கு வந்து கற்றுக் கொண்டால் இன்னும் நன்றாக இருக்கும்.

லக்ஷ்மி : நான்கூடச் சொன்னேன்; ஆனால் அவள் வெளியிலே வருகிறதே இல்லை. அவள் வெளியில் தலை காட்டி ரொம்ப நாள் ஆகிறது...இன்றைக்குப் பாடம் வேண்டாம் சுவாமி—எனக்கு நேரம்...

சுப்பிர : இதோ பல்லவியை மட்டும் சொல்லிக் கொடுக்கிறேன். கமலாவுக்கும் அதைச் சொல்லிக் காண்பி.

(பாட்டு)

காண்ப தென்றோ நான்—உன்னைக்
காண்ப தென்றோ நான் (காண்)

[இருவரும் மாறி மாறிப் பாடத் திரை விழுகிறது.]

# இரண்டாம் அங்கம்

## காட்சி ஒன்று

[சத்திரத்தில் சுப்பிரமணியன் அறை சற்று மாறுதலுடன் காண்கிறது. மாலை நேரம்.]

சுப்பிர ; எங்கே ராமநாதா, உன்னை ரொம்ப நாளாய்க் காணோம்?

ராம : இன்னும் இங்குதானிருக்கிறாயா, நீ வேறு ஊருக்கு போயிருப்பாயென்றல்லவோ எதிர்பார்த்தேன்?

சுப்பிர (இழுத்தாற்போல) : இங்கேயேதான் கொஞ்ச காலம் இருக்கலாமென்று யோசனை.

ராம : ஏன் உன் சிஷ்யை லக்ஷ்மி பாட்டெல்லாம் படித்துக்கொண்டு முடியவில்லையோ?

சுப்பிர : அது கிடக்கட்டும். உன்னிடத்திலே ஒரு முக்கியமான விஷயம் பேசவேண்டும், நீதான் பெரிய சமூக சீர்திருத்தவாதியாயிற்றே.

ராம: சமூகமே வேண்டாமென்று துறந்துவிட்ட சுவாமி களுக்கு அதைப்பற்றி எல்லாம் என்ன கவலை?

சுப்பிர: ராமநாதா, விளையாட்டெல்லாம் வேண்டாம். நான் ஒரு விஷயம் கேட்கிறேன். விதவா விவாகம் செய்துகொள்வது பற்றி உன்னுடைய கருத் தென்ன?

ராம: அதைத்தானே நான் வற்புறுத்திக்கொண்டு வருகிறேன். விதவா விவாகம், கலப்பு மணம் இவற்றையே ஒவ்வொரு இளைஞனும் மேற்கொள்ள வேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

சுப்பிர: சீர்த்திருத்தம் என்பதற்காகவே அப்படிச் செய்ய லாமா? மனப் பொருத்தம் இருக்கவேண்டாமா?

ராம: அதுவும் கூட இருந்துவிட்டால் ரொம்ப விசேஷம் தான். ஆமாம், இப்பொழுது இந்தக் கேள்வி யெல்லாம் எதற்கு? லக்ஷ்மியைக் கலியாணம் செய்து கொள்ளப் போகிறாயா என்ன? அவள் விதவை யில்லையே?

சுப்பிர: போடா, லக்ஷ்மி, லக்ஷ்மி—உனக்கு அவளைப் பற்றித்தான் பேச்சு.

ராம: உனக்கேன் அவளைப்பற்றிப் பேச்செடுத்தால் கோபம் வந்துவிடுகிறது? கேலி, தமாஷ் என்ப தெல்லாவற்றையும் துறந்துவிட்டாயோ? அல்லது உங்களுக்குள்ளே தடுமாற்றமா? தாபமா அல்லது...?

சுப்பிர: ராமநாத், கேலிக்குச் சந்தர்ப்பம் இல்லையா? எப்போதும் கேலிதானா?

ராம: இப்பொழுது சந்தர்ப்பம் என்ன தவறிவிட்டது? சரி—கேலியெல்லாம் வேண்டாம். நான் என்

னுடைய உண்மையான கருத்தைச் சொல்லி விடுகிறேன். பேசாமல் ஊருக்கு வந்து இல்லற தர்மத்தை மேற்கொள். நண்பன் என்கிற முறையில் நான் வற்புறுத்திக் கூறுகிறேன்.

சுப்பிர : இப்பொழுது நான் கலியாணம் செய்து கொள்வதாக வைத்துக் கொள்வோம். ஊரார் நகைக்க மாட்டார்களா ?

ராம : சரியென்று தோன்றியதைச் செய்யத் தைரியமுள்ளவனே மனிதன். நீ துறவு பூண்டதற்காகக்கூடச் சிலர் சிரிக்கிறுர்கள். அதற்கென்ன சொல்லுகிறுய் ?

சுப்பிர : உஸ்...அதோ லக்ஷ்மி வருகிறுள்.

ராம : அடடா, எவ்வளவு ஆவலோடு பேசுகிறுய், இன்னெருத்தி உன்னுடைய பாட்டைப் பாடிஞளே அவள் பெயர் இப்பொழுதாவது தெரியுமா ?

சுப்பிர : அவள்தான் கமலா.

ராம : அவள்தான் கமலா என்று என்னமோ சொந்தமாகச் சொல்லுகிறுயே ? யாரடா அவள் ?

சுப்பிர (சற்று திகைத்து) : இதோ வருகிறுளே அவளுடைய அக்கா அவள்.

ராம : நீ பார்த்திருக்கிறுயா ?

சுப்பிர : இல்லே—அவள் வீட்டைவிட்டு வெளியிலேயே வருவதேயில்லேயாம்.

ராம : ஏன் அப்படி ?

சுப்பிர : அவள் சிறு வயது. கலியாணமாகி ஒரு வருஷத்திற்குள்ளே புருஷன் இறந்து போனுனும். பாவம் தாயில்லாப் பெண்.

ராம : அட பாவமே—சரிசரி—நம்ம லக்ஷ்மியைப் போலவே அழகாக இருப்பாளல்லவா ?

சுப்பிர : எத்தனை இனிமையான குரல்... சிறு வயதிலே அவளெல்லாம் விதவையாகக் காலம் கழிப்பதா...? என்ன உலகம்? இதற்கெல்லாம் விமோசனமே இல்லையா ?

ராம : நான் அப்படியே கோயில் பக்கம் போய்வரட்டுமா? சிவபெருமானுடைய திருமணச் சிற்பத்தை அன்று நன்ருகப் பார்க்க நேரமில்லை.

சுப்பிர : ஏன்...இரேன்? சரி, போனுல் சீக்கிரம் வந்துவிடு. பிறகு லக்ஷ்மியைப் புதிய பாட்டொன்று பாடிக் காண்பிக்கச் சொல்லுகிறேன்.

ராம : கட்டாயம் வருகிறேன்...

[புறப்படுகிருன்—லக்ஷ்மி உள்ளே வந்து வணங்கி நிற்கிருள்.]

லக்ஷ்மி : அந்தப் பாட்டை நன்ருகப் பாட வந்துவிட்டது.

சுப்பிர : எங்கே பாடு பார்க்கலாம். இப்படி உட்கார்ந்து பாடு.

லக்ஷ்மி (பாட்டு) :

பல்லவி

ஆசை தீர வருவாய்—என்னை
அணைத்து முத்தந் தருவாய் (ஆசை)

அனுபல்லவி

வீசு மின்னல் வேலா உன்னை
வேண்டி வேண்டி நின்றேன் (ஆசை)

சரணம்

நாளு மென்றன் உள்ளம் இங்கே
நாடும் இன்ப மெல்லாம்
வேலே வென்ற அழகா அன்பு
மீறி வந்து தருவாய் (ஆசை)

சுப்பிர : பேஷ். இது என்ன ராகம் தெரியுமோ?

லக்ஷ்மி : வசந்தா.

சுப்பிர : என்ன லக்ஷ்மி, கமலா இந்தப் பாட்டைப் பாடுவதே இல்லையா ?

லக்ஷ்மி : அவள் இந்தப் பாட்டை ஏனோ பாடம் செய்ய வில்லை. ஒரு தடவைகூடப் பாடவில்லை.

சுப்பிர : ஏன்?

லக்ஷ்மி : ஏனென்று நான் கேட்டால் சொல்லமாட்டே னென்கிறாள். உங்களுடைய பாட்டு என்றால் அவளுக்கு ரொம்ப இஷ்டம்.

சுப்பிர : இதுவும் என்னுடையப் பாட்டுத்தானே?

லக்ஷ்மி : ஆமாம், இருந்தாலும் இந்தப் பாட்டை அவள் பாட விரும்பவில்லை.

சுப்பிர : லக்ஷ்மி, உங்கள் வீட்டிலே யார் பட்சண மெல்லாம் செய்கிறது ?

லக்ஷ்மி : அக்காள்தான் செய்வாள், வேறு யார் இருக் கிறார்கள் செய்ய ? எனக்கு ஒன்றுமே செய்யத் தெரியாது.

சுப்பிர : கமலா நன்றாகச் செய்வாளா ?

லக்ஷ்மி : ஓ, ரொம்ப நன்ருகச் செய்வாள். நீங்கள்தான் கொண்டுவரப்படாது என்று சொல்லிவிட்டீர்களே? கமலா பிரியமாகச் செய்து கொடுத்தாள்.

சுப்பிர : அப்படியா ? அவளா செய்தனுப்பினுள் ? நீ சொல்லவே இல்லையே ?

லக்ஷ்மி : அப்பா வந்து உங்களை வீட்டுக்கு அழைத்ததும் கமலா சொல்லித்தான்...

சுப்பிர : இப்போ அப்பாவிடம் கமலா சொல்லுகிற தில்லையா ?

லக்ஷ்மி : இப்போ ஏன் சொல்லுகிருள் ? நீங்கள்தான் அந்தப் பேச்சே கூடாது என்று கண்டிப்பான உத்திரவு போட்டுவிட்டீர்களே ?

சுப்பிர (இழுத்தாற்போல) : அன்றைக்கென்னவோ அப்படிச் சொன்னேன்.

லக்ஷ்மி : சுவாமி, இனிமேல் உங்களுக்கு ஒன்றும் கொண்டு வரமாட்டேன். வீட்டிற்கு நாங்கள் கூப்பிடவே மாட்டோம். சுவாமியார் கோபித்துக் கொள்ளுகிறமாதிரி நடக்கப்படாது என்று அக்காள் சொல்லியிருக்கிருள்.

சுப்பிர : நான் உங்கள் வீட்டிற்கு வரக்கூடாதா ?

லக்ஷ்மி : இப்படியெல்லாம் கேட்டு என்னை ஏமாற்றப் பார்க்கிறீர்கள். நீங்கள்தான் யார் வீட்டிற்கும் வராதவர் என்று எனக்குத் தெரியுமே.

சுப்பிர : கமலாவை இந்தப் பாட்டைக் கற்றுக்கொள்ளச் சொன்னேன் என்று சொல்லு.

லக்ஷ்மி : நீங்கள் பாடச் சொன்னுல் அவள் கட்டாயம் பாடுவாள்.

சுப்பிர : அதெப்படி உனக்குத் தெரியும் ?

லக்ஷ்மி : நீங்கள் பல பேருக்கு உபதேசம் செய்கிறீர்கள் அல்லவா ? அவற்றையெல்லாம் சொல்லும்படி அவள் என்னைக் கேட்பாள்.

சுப்பிர : அப்படியா ?

லக்ஷ்மி : நீங்கள்தான் அவள் தெய்வம் என்று சொல்லுகிருள்.

சுப்பிர : அப்படியானுல் அவளுக்காக என் விரதத்தைக் கூட விட்டு விடலாமென்று தோன்றுகிறது.

லக்ஷ்மி : சுவாமி, உங்கள் விரதத்திற்குப் பங்கம் வரும்படி நான் செய்துவிட்டால் பிறகு அக்காள் என்னிடம் பேசவே மாட்டாள்.

சுப்பிர : அப்படியெல்லாம் செய்ய மாட்டாள்.

லக்ஷ்மி : ஏன் செய்ய மாட்டாள் ? அவள் ரொம்பப் பிடிவாதக்காரி. உங்கள் இஷ்டத்திற்கு விரோதமாக அப்பா ஏதாவது செய்து விட்டாலும் அவள் கட்டாயம் கோபித்துக் கொள்வாள். நீங்கள்தான் அவளுக்கு எல்லாம். நேற்று நீங்கள் ஆற்றுக்குப் போகும்போது உங்கள் பாதங்களில் வைப்பதாகப் பாவித்துக்கொண்டு அவள் இரண்டு ரோஜா மலர்களை இரண்டு கையாலும் முன்னுல் வைத்துவிட்டு உங்களைப் பார்த்துக் கும்பிட்டுக் கொண்டிருந்தாள்.

சுப்பிர : லக்ஷ்மி,அந்தப் பட்சணம்......ம்......அது வேண்டாம். சும்மா வேடிக்கையாகச் சொன்னேன், அதோ, ராமநாதன் வருகிருன்,

லக்ஷ்மி : ஆமாம், சுவாமி. நான் போய் வருகிறேன்.

சுப்பிர : ராமநாதனுக்கு உன் பாட்டைக் கேட்க வேணு மாம். வாடா, ஏன் இவ்வளவு நேரம் ?

ராம (உள்ளே நுழைந்து கொண்டே): அப்பா, எத்தனை பேரை வசியம் பண்ணி வைத்திருக்கிருய் ? இந்தக் காவித் துணிக்கு உள்ள மதிப்பே மதிப்படா.

சுப்பிர : என்னடா அது ? நான் கேட்டதை விட்டுவிட்டு என்னவோ மதிப்புப் போடுகிருயே ?

ராம : கோயிலிலே ஒரே வாக்குவாதம். நீ ரொம்ப நாளைக்கு இப்படிக் காவி போட்டுக்கொண்டு திரிய மாட்டாய் என்று நான் தமாஷாகச் சொல்லி வைத் தேன். எல்லோரும் என்மேலே ஒரே பாய்ச்சல் ; அடிக்குத் தப்பித்து ஓடி வந்துவிட்டேன்.

சுப்பிர : யாரடா அவர்கள்?

ராம : எல்லாம் உன்னுடைய அடியார்கள்தான். உன் னுடைய துறவைப்பற்றி அவர்கள் அத்தனை பெருமையாகப் பேசிக் கொண்டார்கள்.

சுப்பிர : அதிருக்கட்டும். இப்போ லக்ஷ்மியின் பாட்டைக் கேட்கலாமா ?

ராம : முதலில் அதோ வெளியிலே நிற்கும் அவர்களுக்குச் சமாதானம் சொல்லிவிட்டு வா. நான் உன்னுடைய பாலிய சிநேகிதன், தமாஷாகத்தான் பேசினேன் என்று என்ன சொன்னுலும் அவர்கள் நம்பவில்லை. நீயே சொல்ல வேணுமாம். இல்லாவிட்டால் நான் இந்த ஊரைவிட்டு உடம்போடு போக முடியாது.

சுப்பிர (சிரித்துக்கொண்டே): நீயும் கூடவா லக்ஷ்மி, இந்த வேடிக்கையைப் பார்த்துவிட்டுப் பிறகு பாடலாம்.

[மூவரும் வெளியே போகிருர்கள்.]

# காட்சி இரண்டு

[லக்ஷ்மியின் வீட்டிலே ஓர் அறை. லக்ஷ்மி பாயிலே படுத்திருக்கிருள். கமலா ஜன்னல் ஓரமாக நிற்கிருள். இரவு பத்து மணி. லாந்தரில் மங்கிய வெளிச்சமே தெரிகிறது.]

**கமலா :** லக்ஷ்மி, இங்கே எழுந்து வா.

**லக்ஷ்மி :** நான் வரமாட்டேன் போ—தூக்கம் வருகிறது.

**கமலா :** என்னடி இதற்குள்ளே தூக்கம்? மணி பத்து தானே ஆகிறது? இங்கு வா, அது யாரென்று பார்.

**லக்ஷ்மி** (தலையை நிமிர்ந்து): எங்கே?

**கமலா :** அதோ, அந்த எதிர் வீடடுத் திண்ணையில்.

**லக்ஷ்மி :** யாராவது பிச்சைக்காரனுக இருக்கும். அந்த வீட்டில்தான் இப்பொழுது யாரும் குடியில்லையே?

**கமலா** (சற்று கோபத்தோடு): இல்லடி... பார்த்தால் அந்த சாதுபோல......

**லக்ஷ்மி :** போக்கா, அவர் இங்கே எதுக்கு வருகிருர்? உனக்கு எப்பொழுதும் அவரைப் பற்றியே ஞாபகம்.

**கமலா :** இங்கே வா லக்ஷ்மி—அவரேதான்.

**லக்ஷ்மி :** நான் மாட்டேன் போ......தூக்கமா வருகிறது.

[போர்வையை இழுத்துப் போர்த்துக் கொள்கிருள். வெளியே பாட்டுக் கேட்கிறது.]

**சுப்பிர** (பாட்டு):

பல்லவி

உறங்கிட லாமோ—நீதான்
ஓடி அகக் கதவைநாடித் திறந்திடாமல் (உறங்)

லக்ஷ்மி (அவசரமாக எழுந்து வந்து உற்சாகத்தோடு) : அக்கா, அது அவர் குரலேதான்—இதோ அவரே தான்.

கமலா (மிகுந்த மகிழ்ச்சியுடன்) : லக்ஷ்மி, சத்தம் போடாதே, பாட்டைக் கேட்கலாம்.

சுப்பிர (பாட்டு) :

பல்லவி

உறங்கிடலாமோ—நீதான்
ஓடி அகக் கதவை நாடித் திறந்திடாமல் (உறங்)

அனுபல்லவி

கறங்குபோல் வாழ்வினில் காலமெல்லாம் சுற்றி
அறங்கெட வாழ்ந்துபின் அனலிடை மறைவதோ
(உறங்)

சரணம்

பிறவியெடுத்தபயன் பெறுவதே அறிவாம்
பேதமை இருள்ஓடப் புரிவதே நெறியாம்
மறலியை வென்றவர் மாண்புடை யோராம்
மானிட தேகத்தின் குறியிதுவேயாம் (உறங்)

[பல்லவியையே மூன்று தடவை திருப்பிப் பாடுகிறான்.]

லக்ஷ்மி : பார்த்தாயா அக்கா—எவ்வளவு இனிமையாகப் பாடுகிறார் !

கமலா : ஆஹா, இந்தப் பாட்டைக் கேட்கக் கொடுத்து வைக்கவேண்டும்.

லக்ஷ்மி : புதிது புதிதாக அவர் பாட்டு எழுதிக் கொண்டே இருக்கிறார்.

கமலா : ஆனால், அவர் எதற்காக இங்கே வந்திருக்கிறார்?

லக்ஷ்மி : அது என்னவோ ? எனக்கென்ன தெரியும் ? இப்பவெல்லாம் உபந்நியாசம் செய்கிற போதும் மறதியாக என்னென்னவோ சீர்திருத்தத்தைப் பற்றியெல்லாம் பேச ஆரம்பித்துவிடுகிறாராம்.

கமலா : உலக எண்ணமே அவருக்கு மறந்து போனாலும் போகலாம்.

லக்ஷ்மி : அக்கா, அவரை நம் வீட்டிற்கு அழைத்து வந்தால் என்ன ?

கமலா : இந்த சமயத்தில் வேண்டாம். அதுவும் அப்பா ஊரில் இல்லாத காலத்தில்......

லக்ஷ்மி : சாமியார்தானே ? அவர் வந்தால் என்ன ?

கமலா : யாராயிருந்தாலும் வேண்டாம். மேலும் அவர் இஷ்டப்படமாட்டார். கோபித்துக்கொண்டாலும் கொள்ளுவார்.

லக்ஷ்மி : அக்கா, அவருக்கு உன்னுடைய பாட்டென்றால் ரொம்ப இஷ்டம். அதைக் கேட்கவே தினமும் அதிகாலையில் இந்த வீதி வழியாகப் போகிறாராம்.

[கமலா பாடத் தொடங்குகிறாள். லக்ஷ்மி படுக்கையில் படுத்துப் போர்த்துக் கொள்கிறாள்.]

கமலா (பாட்டு) :

பல்லவி

எங்கு நீ யுள்ளாய்—முருகா
ஏங்கு நீ யுள்ளாய் (எங்கு)

அனுபல்லவி

கங்குலும் வந்தது காரிருள் சூழ்ந்தது
கானகத் துணைத் தேடிக் கருகிநான் வந்தேன் (எங்கு)

சரணம்

மின்னல் வெடித்துமே வீரிடக் கால்களை
பின்னிக் கொடிகளும் பிடித்திட அயர்ந்தேன்
என்னிடர் கண்டுநீ இறங்கியென் எதிர்வந்து
அன்புடன் கரம்பற்றி அணைத்திடு வாயே (எங்கு)

*[பாடிவிட்டு ஜன்னல் வழியாகப் பார்க்கிறாள். உறங்கிடலாமோ என்ற பல்லவி கேட்கிறது.]*

## காட்சி மூன்று

*[சுப்பிரமணியன் உள்ள சத்திர அறை. காலை எட்டு மணி ]*

சுப்பிர : லக்ஷ்மி, இதுவரை நான் சொல்லிக் கொடுத்த பாட்டுக்களையெல்லாம் நன்றாகப் பாடுகிறாய். எங்கே மறந்து போய்விட்டாயோ என்றுதான் பாடச் சொன்னேன். எனக்கு மிகவும் திருப்தி. இனிப் புதிய பாட்டொன்று ஆரம்பிக்கலாமா?

லக்ஷ்மி : நேற்றிரவு ஒரு புதிய பாட்டுப் பாடினீர்களே—அது எனக்குப் பிடித்திருக்கிறது.

சுப்பிர : நேற்றிரவா? நான் பாடியது உனக்கெப்படித் தெரியும்?

லக்ஷ்மி : எதிர் வீட்டுத் திண்ணையிலிருந்துதானே பாடினீர்கள்? எனக்கு நன்றாகக் கேட்டதே.

சுப்பிர : நான் பாடியதைக் கமலா கேட்டளா?

லக்ஷ்மி : ஓ, அவளுந்தான் கேட்டுக்கொண்டிருந்தாள்.

சுப்பிர : அவளுக்குப் பாட்டுப் பிடித்ததோ? அவள் ஒன்றும் சொல்லவில்லையா?

லக்ஷ்மி : அவளுக்கு ஒரே சந்தோஷம். நீங்கள் பாடுவதை முதல் தடவையாக ராத்திரித்தான் அவள் கேட்டாள். அவளுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. அவளும் பாடத் தொடங்கிவிட்டாள்.

சுப்பிர : நான்மறுபடியும் ஒரு புதுப்பாட்டுப் பாடினேனே?

லக்ஷ்மி : அதை நான் கேட்கவில்லை. அதற்குள்ளே எனக்குத் தூக்கம் வந்துவிட்டது.

சுப்பிர : நான் இரவில் வெகு நேரம்வரை பாடிக்கொண்டிருந்தேன். கமலா அந்தப் பாட்டுக்களை யெல்லாம் கேட்டிருப்பாளென்று நினைக்கிறேன்.

லக்ஷ்மி : சுவாமி, எனக்கு நேரமாகிவிட்டது. நான் போக வேணும்.

சுப்பிர : என்ன அவ்வளவு அவசரம்? புதிய பாட்டு வேண்டாமா?

லக்ஷ்மி : அப்பா வெளியூருக்குப் போயிருக்கிறார். நான் கமலாவுக்குத் தண்ணீர் எடுத்துக் கொடுத்துவிட்டுப் பிறகு பள்ளிக்கூடம் போகவேண்டும்.

சுப்பிர : அப்பா எங்கே போயிருக்கிறார்?

லக்ஷ்மி : வெளியூர் போயிருக்கிறார்-வர இன்னும் இரண்டு நாள் செல்லும்.

சுப்பிர (திடீரென்று) : லக்ஷ்மி, நான் உங்கள் வீட்டிற்கு வரட்டுமா?

லக்ஷ்மி : நீங்களே வருவதானால் எனக்குச் சந்தோஷம் தான். அக்காவும் நீங்கள் வீட்டிற்கு வரவேண்டு மென்று ஆவலோடிருக்கிறாள்.

சுப்பிர : அப்படியா? சரி அவளிடம் சொல்லு. நான் பதினொரு மணிக்கு வருகிறேன்.

லக்ஷ்மி : இப்பொழுதே வாருங்கள், நான் அழைத்துச் செல்லுகிறேன். பதினொரு மணியென்றால் நான் பள்ளிக்கூடம் போய்விடுவேன்.

சுப்பிர : இல்லை, இப்பொழுது நீ போய்க் கமலாவிடம் சொல்லு! நான் பின்னால் வருகிறேன். இப்போ கொஞ்சம் வேலையிருக்கிறது.

லக்ஷ்மி . சரி, சுவாமி. நான் இல்லாவிட்டால் பரவா யில்லை. நான்தான் தினமும் உங்களைப் பார்க் கிறேனே.

[போகிறாள்.]

## காட்சி நான்கு

*[கமலா இருக்கும் வீட்டில் முன் அறை. கமலா எதிர்பார்த்து நின்றிருக்கிருள். சுப்பிரமணியம் உள்ளே நுழைகிருன். காலை பதினொரு மணி.]*

**சுப்பிர :** கமலா......

**கமலா :** சுவாமி, அடியாள் மிகவும் பாக்கியசாலி. இப்படி இந்த ஆசனத்தில் அமருங்கள். அப்பா இன்று ஊரிலிருந்தால் மிகவும் சந்தோஷப்படுவார்.

*[வணங்கி நிற்கிருள்.]*

**சுப்பிர :** எங்கே லக்ஷ்மி ?

**கமலா :** அவள் பள்ளிக்கூடம் சென்று விட்டாள். தாங்கள் வரும்போது இருக்க முடியவில்லையே என்று அவள் வருத்தத்தோடு சென்றிருக்கிருள்.

**சுப்பிர :** நீ பாடுவதைக் கேட்டுக் கேட்டு அளவிலா மகிழ்ச்சி யடைந்திருக்கிறேன். உன்னுடைய குரல் என்னை இங்கே இழுத்து வந்துவிட்டது.

**கமலா :** தங்களுடைய பாட்டின் மகிமையாலேயே நான் கடைத்தேறினேன். அவற்றைப் பாடுவதிலேயே பேரின்பம் எனக்கு வாய்த்திருக்கிறது.

**சுப்பிர** (மெதுவாக) **:** நான் பாட்டெழுதவும், நீ அதைப் பாடவும் இருந்தால் எவ்வளவு இன்பமாக இருக்கும்.

**கமலா :** நீங்கள் எங்கிருந்தாலும் நான் தங்கள் பாட்டுக்களை எப்பொழுதும் பாடிக்கொண்டிருப்பேன், சுவாமி.

சுப்பிர : நீ அருகில் இருந்தால் எத்தனை பாட்டுக்கள் எழுதுவேன் தெரியுமா ? எனக்குப் பாட்டெழுத உற்சாகம் கொடுப்பதெல்லாம் இப்பொழுது நீதான் கமலா.

கமலா : சுவாமி, கடவுள் பக்தியால் பரவசப்பட்டல்லவா தாங்கள் பாடுகிறீர்கள் ?

சுப்பிர : முதலில் அப்படித்தான் பாடினேன். ஆனால், இன்று எனக்கு உயிர்த் துடிப்பாக உள்ளதெல்லாம் நீதான்.

கமலா (திடுக்கிட்டு) : சுவாமி, இதென்ன ?

சுப்பிர : கமலா, உன்னை இதுவரை நேரில் கண்டதுகூட இல்லை. உனது இனிய இசையின்மூலம் உன்னை நான் கண்டேன். உனது அழகிய தாமரை போன்ற முகத்தை இன்று கண்டு களிக்கிறேன். இவ்வளவு சிறு வயதிலேயே நீ உலக வாழ்வை இழந்து கைம்மை பூண்டு நைந்துவிடக் கூடாது என்பது என்னுடைய ஆசை.

கமலா : சுவாமி, நீங்கள் சொல்லுவதை என்னால் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. முன் ஜன்மத்தில் செய்த தீவினைகளின் பயனை இன்று நான் அனுபவிக்கிறேன். என்னுடைய வாழ்வைப்பற்றித் துறவு பூண்ட நீங்கள் கவலை கொள்ளக்கூடாது.

சுப்பிர : நான் உனது வாழ்க்கையை எனது வாழ்க்கையோடு பிணைத்து ஒன்றாக்க நிச்சயித்திருக்கிறேன். யாருக்கும் பயனற்ற இந்தத் துறவு எனக்கு இனி வேண்டாம். எனக்கு வேண்டியது உன்னைப்போன்று ஒரு களங்கமற்ற, ஆனால், சோகம் நிறைந்துள்ள

ஒரு பெண்மணியின் வாழ்க்கைக்கு இன்பமும் சாந்தியும் தரக்கூடுமானால் அதுவே எனக்கும் சாந்தி அளிக்கும்.

கமலா : என்ன, எனது குருநாதராகிய தாங்களா இப்படிப் பேசுகிறீர்கள் ?

சுப்பிர : கமலா, உன்னைக் காணுமலே காதல் கொண்டேன். உனது விதவைக் கோலத்தை மாற்றுவதை விட இத்தத் துறவு எனக்குப் பெரிதல்ல. நீயும் என் மேல் அன்பு கொண்டிருக்கிருய் என்பதை நான் அறிவேன்.

கமலா : நீங்கள் ஏதோ கனவுலகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறீர்கள், சுவாமி. உங்களைப்பற்றி எவ்வளவோ உயர்வாக நான் எண்ணிக்கொண்டிருக்கிறேன். - அந்த எண்ணத்தை எல்லாம் மாற்றி விடாதீர்கள். நீங்கள் பேசுவதின் மர்மம் தெரியவில்லையே.

சுப்பிர : கமலா, உனக்கு என்மீது ஆசையில்லையா? நான் இவ்வழியாகப் போகும்போதெல்லாம் அழகாகப் பாடிக்கொண்டிருப்பாயே ? எனக்காகத்தானே அப்படிப் பாடுவது ?

கமலா : சுவாமி, நீங்கள் இம்மாதிரியெல்லாம் பேசக் கூடாது. உங்கள் பாட்டைக் கற்பதற்கு முன்னுல் என் உள்ளத்திலே எத்தனையோ சஞ்சலங்கள், உலக ஆசைகள் இருந்தன. ஆனுல், இன்று நான் புதிய உயிர் பெற்றவள். உங்கள் பாட்டே அதற்குக் காரணம். எனது வாழ்க்கை புனிதம் அடையவும் அதிலே கடவுள் பக்தியென்ற இன்பத் தேன் ஊறி என் மனம் சாந்தி பெறவும் அருள் செய்த உங்களை என் குருநாதராக ஏற்றுக்கொண்டிருக்கிறேன்.

சுப்பிர : கமலா, வாழ்க்கைத் தோணியிலே நாமிருவரும் கைகோத்துக்கொண்டு செல்வோம் வா. அதன் அந்திய காலத்திலே இருவருமாகச் சேர்ந்து இறைவன் அடியை நோக்கிச் செல்லப் பாடுபடுவோம். இப்பொழுது அந்த நினைவு வேண்டாம்.

கமலா : உலக சுகங்களெல்லாம் மாயை என்று உங்கள் வாக்கிலிருந்துதான் நான் உணர்ந்தேன். என் உள்ளம் உலக சுகங்களை நாடி அலைந்தபோது உங்களை இங்கு வரும்படி அழைத்தேன். அன்று நல்ல வேளையாக வர மறுத்துவிட்டீர்கள். உங்கள் பாட்டையும் உபதேச மொழிகளையும் கேட்டுக் கேட்டு என் வாழ்க்கையே புனர்ஜன்மம் பெற்று விட்டது. நீங்கள் இன்று இவ்வாறு பேசுவது தகாது.

சுப்பிர : கமலா, காதலால் வாடும் என்மேல் உனக்குக் கருணையில்லையா ?

கமலா (கண்டிப்பாக) : நீங்கள் பேசுவது சரியான வார்த்தையல்ல. எனது வாழ்வில் உன்னத நோக்கத்தை அளித்ததற்கு நீங்கள் காரணமாக இருந்தீர் என்பதற்காக நான் இவ்வளவு நேரம் பொறுத்திருந்தேன். மேலும் மேலும் இவ்வாறு பேசி என் மனதை நோகச் செய்யாதீர்கள்.

சுப்பிர : கமலா, உன்னைப்பற்றி நினைத்ததெல்லாம் பாழாய்ப் போகவா ?

கமலா : என்னைப்பற்றி என்ன நினைத்தீர்கள் ? இளம் கைம்பெண்ணைக் கேட்டால் மறுவார்த்தை சொல்லாமல் பின்னால் வருவாள் என்றுதானே எண்ணினீர்கள்,? உமது துறவு வேஷத்துக்கு இது தகுமா ?

சுப்பிர : வேஷமா, கமலா—என்னை வேஷக்காரனென்று சொல்லுகிறாய் ?

கமலா : சுவாமி, நான் கடுமையாகப் பேசியிருந்தால் என்னை மன்னித்து விடுங்கள். தோற்றத்திலே துறவுக் கோலம் கொண்டு உள்ளத்திலே உலக ஆசை வைத்திருந்தால் இதை என்னவென்று சொல்வது ?

சுப்பிர : நான் வேஷம் போட்டுக்கொண்டு இங்குவரவில்லை. உண்மையான திடசித்தத்தோடுதான் காஷாயம் பூண்டு ஊர் ஊராகத் திரிந்தேன். இங்கும் வந்தேன். ஆனால், உன் பாட்டைக் கேட்டது முதல்......

கமலா : உங்களுடைய மன உறுதியைக் குலைக்க நானா காரணமானேன் ?

சுப்பிர : உனது குரல் என்னை மாற்றிவிட்டது கமலா—தினமும் காலையில் நான் இவ்வழியே போகும்பொழுதெல்லாம் எதற்காகப் பாடினாய் ?

கமலா : நீங்கள் ஏன் இவ்வழியே வந்தீர்கள் ? நான் பாடாமல் இருந்திருந்தால் மட்டும் உலகத்திலே வேறு சோதனைகள் இல்லையோ ? எத்தனையோ சாஸ்திரங்களெல்லாம் கற்றுத் தெரிந்த நீங்கள் இவ்வாறு கூறுவது சரியில்லையே.

சுப்பிர (நிதானமாக) : கமலா, நீ சொல்லுவதும் ஒரு விதத்தில் உண்மைதான். சோதனைக்குப் ஒளிந்து கொண்டிருந்தேன். யாருடனும் பேசுவதில்லை. யார் வீட்டிற்கும் பே

எந்த ஊரிலும் சில நாட்களுக்குமேல் தங்குவதில்லை. ஆனால், உனது குரல் எனக்குச் சோதனையாக எப்படியோ ஏற்பட்டுவிட்டது. அதற்கு என்னால் தப்ப முடியவில்லை. அதிலேயே தோல்வியும் அடைந்தேன்.

**கமலா :** சுவாமி, நாட்டை விட்டுக் காட்டிற்குச் சென்று மனதைப் பக்குவதப்படுத்துவது எளிது. நாட்டிலேயே அந்தப் பக்குவம் ஏற்பட வேண்டுமானால் உறுதியும் கவனமும் அதிகம் வேண்டும். இவையெல்லாம் தங்களுக்குத் தெரியாததல்ல.

**சுப்பிர :** நான் வெறும் புத்தகப் படிப்பில் அதைத் தெரிந்து கொண்டிருக்கிறேன். நீ ஆழ்ந்த சிந்தனையாலும், உள்ளத்திற்குள்ளே ஊடுருவிப் பார்த்தும் அறிந்துகொண்டிருக்கிறாய். உண்மையில் நீயே எனக்குக் குருவாக இருக்கத் தகுதியுடையவள்.

**கமலா :** சுவாமி, தாங்கள் அவ்வாறு சொல்லக்கூடாது.

**சுப்பிர :** நீ எதற்காக அன்றிரவு நான் பாடி முடித்ததும் பாடத் தொடங்கினாய் ?

**கமலா :** இளம் வயதிலேயே உலகத்தைத் துறந்த உங்களால் நானும் அந்த வழியிலே நின்று இறைவனிடம் மனதை நிறுத்த முற்பட்டிருக்கிறேன் என்பதைத் தெரியப்படுத்துவதற்காகத்தான். அதையறிந்து தாங்கள் மகிழ்ச்சியடைவீரென்றல்லவா நினைத்தேன்.

**சுப்பிர :** ஆனால், ஏன் அந்தப் பாட்டைப் பாடினாய் ?

கமலா (யோசனையோடு) : எந்தப் பாட்டு ?

சுப்பிர : எங்கு நீ யுள்ளாய்—என்ற பாட்டு.

கமலா : ஐயையோ, அதற்கு விபரீதமான அர்த்தம் கற்பித்துக் கொண்டீர்களா ? நான் எங்கள் குல தெய்வம் முருகனை நினைத்தல்லவா பாடினேன் ?

சுப்பிர (விசனத்தோடு): கமலா, இந்தப் பொல்லாத மனம் செய்கிற சூழ்ச்சியிலே நான் ஏமாந்து போனேன். ஆசை மீறுகிறபோது மனம் இல்லாததையெல்லாம் தனது விருப்பத்தின்படியே கற்பனை செய்து கொள்ளுகிறது. குழந்தை லக்ஷ்மியின் கபடமறியாத் பேச்சும் என்னை ஏமாற்றிவிட்டது.

கமலா : இளமையிலே எத்தனையோ சோதனைகள் ஏற்படுகின்றன. அவற்றில் ஏமாந்து மயங்காமல் நன்னெறியில் நிற்கும் திறமையை இறைவன் நமக்கு அருள வேண்டும். அதுவே என்னுடைய பிரார்த்தனை.

சுப்பிர : கமலா, உன் மூலம் எனக்குச் சோதனை ஏற்பட்டது எனது பாக்கியந்தான். கடவுள் அந்த மட்டிலும் எனக்குக் கருணை காட்டியிருக்கிறார். நான் சென்று வருகிறேன். இம்முறை மட்டும் என்னை மன்னித்துவிடுவாயா ? இனி நான் தவற மாட்டேன். நான் இப்பொழுதே புறப்படுகிறேன்.

[எழுந்து புறப்படுகிறான்.]

கமலா : சுவாமி, எங்கே செல்லுகிறீர்கள்? தங்களுடைய பாட்டு இனிமேல் எனக்கு......

சுப்பிர : எங்கு போகிறேனோ தெரியாது. எனது மனம் பரிசுத்தமடைந்து பலம் பெற்று நின்றால் உன்னைக்

காண வருகிறேன். உனக்கு என்னுடைய பாட்டோ உபதேசமோ தேவையில்லை. நான் மாசு படிந்த துடைப்பம்...நீ புனிதமடைந்த கோயில்...நான் போய் வருகிறேன். இந்த துடைப்பம் உனக்குப் பயன்பட்டதிலே எனக்கு ஆறுதல் தான்.

[சுப்பிரமணியன் புறப்படுகிறான். கமலா பணிந்து நிற்கிறாள்.]

[திரை]

# பெ. தூரன் இயற்றிய நூல்கள்

**கவிதை**

இளந் தமிழா
மின்னல் பூ
நிலாப் பிஞ்சு
பட்டிப் பறவைகள்

**சிறு கதை**

பின்னே வரம்
உரிமைப் பெண்
காளிங்கராயன் கொடை
தங்கச் சங்கிலி
மா விளக்கு

**கட்டுரை**

பூவின் சிரிப்பு
காட்டு வழிதனிலே
தேன் சிட்டு

**நாடகம்**

மனக் குகை
ஆதி அத்தி
அழகு மயக்கம்
பொன்னியின் தியாகம்
காதலும் கடமையும்
சூழ்ச்சி

**உளவியல்**

மனமெனும் மாயக் குரங்கு
குமரப் பருவம்
அடி மனம்
தாழ்வு மனப்பான்மை
குழந்தை உள்ளம்
பாரம்பரியம்

**சிறுவர் இலக்கியம்**

நிலாப் பாட்டி
ஆனையும் பூனையும்
ஜிம்மி
பறக்கும் மனிதன்
ஓலைக் கிளி

**பிற நூல்கள்**

கருவில் வளரும் குழந்தை
பாரதி தமிழ்
காற்றில் வந்த கவிதை

Jacket Printed at Neo Art Press, Madras-2